அருட் பெருஞ்ஜோதி அருட் பெருஞ்ஜோதி
தனிப் பெருங்கருணை அருட் பெருஞ்ஜோதி



திரு அருட்பிரகாச வள்ளலார்
சிதம்பரம் ராமலிங்க அடிகளார்
வழங்கிய

# ஞான சரியை
# மூலமும் உரையும்

உரையாசிரியர்
**வடலூர் முத்து ராமலிங்கம்**



கோட்டையூர்
பழநியப்ப தேனப்பன்
1991.

அருட் பெருஞ்ஜோதி அருட் பெருஞ்ஜோதி
தனிப் பெருங்கருணை அருட் பெருஞ்ஜோதி



திரு அருட்பிரகாச வள்ளலார்
சிதம்பரம் ராமலிங்க அடிகளார்

வழங்கிய



# ஞான சரியை
# மூலமும் உரையும்


உரையாசிரியர்
வடலூர் முத்து ராமலிங்கம்








கோட்டையூர்
தேனப்ப பழநியப்ப தேனப்பன்
1991.

14-4

# முன்னுரை

ஞான சரியை என்பது 16 அனுபவ நிலைகளில் 13-வது நிலையைக் குறிக்கிறது. இதனை திரயோதச நிலை என்பர்.

சரியை கிரியை யோகம் ஞானம் என்ற நான்கு பயிற்சி பகுதிகளில் ஒவ்வொன்றும் நான்கு உட்பிரிவுகளை உடையது. முதல் பகுதி ஒழுக்கத்தையும் இரண்டாவது பகுதி செயலையும், மூன்றாவது பகுதி ஒருமைப்பாட்டையும் நான்காவது பகுதி மெய்யுணர்வையும் குறிக்கும்.

சரியையில் சரியை சரியையில் கிரியை சரியையில் யோகம் சரியையில் ஞானம் என்பது முதல் பகுதியாகிய ஒழுக்கத்தின் பிரிவுகள். இரண்டாவது பகுதியாகிய செய்கை என்கிற கிரியையும் 4 வகைப்படும். அவை கிரியையில் சரியை, கிரியையில் கிரியை, கிரியையில் யோகம், கிரியையில் ஞானம் என்பன. மூன்றாவது பகுதியாகிய ஒருமைப்பாடு என்கிற யோகமும் 4 வகைப்படும். அவை யோகத்தில் சரியை, யோகத்தில் கிரியை யோகத்தில் யோகம் யோகத்தில் ஞானம் என்பன. நான்காவது பகுதியாகிய மெய்யுணர்வாகிய ஞானமும் 4 வகைப்படும். அவை ஞான சரியை ஞான கிரியை ஞான யோகம் ஞானத்தில் ஞானம் என்பன. இவற்றையே அனுபவங்கள் 25-ல் நிலையற்ற 9 நீக்கி நின்ற நிலையான அனுபவங்கள் 16-ம் ஆகும். பூதவெளி முதலிய 16-ம் இதனையே குறிக்கும். இவற்றையே 16-ம் பெற்று பெரு வாழ்வு வாழ்க என்பர் சான்றோர். இந்த 16 அனுபவங்களையும் மருந்தியல் அடிப்படையிலும் உணவியல் அடிப்படையிலும் பெருவாழ்வின் நிலைகளின் அடிப்படையிலும் பகுத்தும் தொகுத்தும் உணரலாம். இவற்றுள் முதல் பாடம் பெருவாழ்வுக்குரிய உணவைப் பற்றியது.

''ஈரமும் அன்பும் கொண்டு இன்னருள் பெற்றேன்
என் மார்க்கம் இறவாத சன்மார்க்கம் தோழி
காரமும் மிகு புளிச் சாரமும் துவர்ப்பும்
கைப்போடே உப்போடே கசப்போடே கூட்டி
உளரமுது உண்டு நீ ஒழியாதே அந்தோ
ஊழிதோறூ ழியும் உலவாமை ஒல்கும்
ஆரமுது உண்டு என்னோடு ஆடேடி பந்து''

உணவை அறுசுவை உடையது என்று பொதுவான இலக்கியங்கள் சொல்கின்றன. ஆனால் இனிப்பை ஆரமுது என்றும் பிரித்துக் காட்டுகிறார். இது ஏழாவது அமுது என்றும் பெருமான் இதுவே மரணமிலாப் பெரு வாழ்வை நல்குவது என்ற உண்மையை ஊழிதோறூழியும் உலவாமை நல்கும் ஆரமுது என்கிறார். மரணத்தைத் தருவன காரம், புளிப்பு, துவர்ப்பு, கைப்பு, உவர்ப்பு, கசப்பு, என்கிற அறுசுவைகள். இவற்றை உண்டால் இந்த ஆறு சுவைகளுமே இனிப்பு என்கிற ஆரமுதாக மாறினால்தான் நிலைத்து வாழ முடியும்.

இதற்கு உதவி செய்யக்கூடிய உறுப்புக்களில் ஈரல் குறிப்பிடத்தக்கது அதில் இரண்டு வகை உண்டு. ஒன்று கல்லீரல். மற்றொன்று மண்ணீரல் மண்ணீரல் என்ற சொல்லுக்கு கழுவுகின்ற ஈரல் என்று பொருள். மண்ணுதல் கழுவுதல். மணி என்பது மண்ணுதலால் கழுவுவதால் ஏற்படுகிறது. கழுவிய பின் ஒளி பெறுகிறது. அதனால் மணியும் ஒளியும் இணை பிரியாதவை நம்முடைய உடம்பில் நஞ்சை நீக்குகின்ற ஈரல் கல்லீரல் ஆகும். இது மண்ணீரலால் தூய்மைப்படுத்தப்பட்ட பொருளை இனிப்புடைய பொருளாக மாற்றி உடம்பில் எந்த இடத்திற்கும் இனிப்பை அனுப்பவல்லதாக இருக்கிறது இதை இன்றைய விஞ்ஞானம் ஒப்புக்கொண்டு குளுகோஸ் கொடுத்து உயிர்களைக் காப்பாற்றுகிறது.

இதைப்போல இன்னொரு இத்தகைய உறுப்பு கண்டத்துக்கு மேல் இருக்கிறது. அதனை ''ஆணிப்பொன்னம்பலம்'' என்ற பாடலில் விரித்து விளக்கியிருக்கிறார் பெருமான். மேல் ஆறு ஆதாரங்களில் மாடம் என்கிற 3-வது ஆதாரம், பல நிறங்களையும் படிப்படியாகத் தரவல்லது. முடிவில் படிக நிறமாகிய தூய வெண்மையில் முடிகிறது. உள்ளம் பரிசுத்தம் ஆவதற்கும் உடம்பு ஆற்றல் பெறுவதற்கும் இந்த மேலாதார மணிபூரகம் போன்ற மாடம் இந்த அற்புதத்தைச் செய்கிறது. நியூட்டன் வானவில்லில் உள்ள 7 நிறங்களும் வெள்ளொளியின் பகுதிகளே என்று விளக்கியிருக்கிறார். உயிரொளி மாறாது அது நிறமாலைக்கு (Spectrum) ஸ்பெக்ட்ரம் மேல் அமைந்து விளங்குவது.

மருந்தில் கற்பம் தான் மிக உயர்ந்தது. இத்தகைய கற்பத்தைப்பற்றி கூறும் பாடல்தான் ''பொற்பங்கயத்தின்'' என்று தொடங்குகிறது. அதில் மரண நவை தீர்க்கும் கற்பம் என்று வருகிறது. இதன் பொருள் நாமறிந்த பஞ்ச கவ்யம் முதலியவற்றை குறிப்பது அல்ல. ஆயிரக்கணக்கான ஆண்டுகள் வாழ்வதற்கு உரிய ஒரு கற்பத்தைப்பற்றியது அது. இதை திருமூலர் ஒரு பாடலில் கூறியிருக்கிறார். மருத்துவ எண்ணாயிரத்தில் அந்தப் பாடல்:

''காக்கை இரண்டு, கரு நீலி, பொற்றலை
வாக்குக்கு இனிய வல்லாரை ஓரைந்தும்
பாக்களவாக்கி யாலில் குழைத்துள்ள
ஆக்கைக்கு அழிவில்லை ஆயிரத்தாண்டே''

இதனுள் காக்கை இரண்டு என்பது வெள்ளைக் காக்கரட்டின் பூ நீலக் காக்கரட்டின் பூ ஆகிய இரண்டையும் குறிக்கும். கருநீலி என்பது அவுரி இலையை குறிக்கும். இது நீல நிறத்தைத் தரும். பொற்றலை என்பது மஞ்சள் பூவை உடைய கரிசலாங்கண்ணி, வல்லாரை ஐந்தாவது இந்த ஐந்தும் மரண நவை தீர்க்கும், கற்பம் என்ற மருந்தைக் குறிக்கும். வள்ளலார் பாடிய பொற்பங்கயத்தின் எனத் தொடங்கும் பாடலில் பொற்பங்கயம் 1. சுத்தசலம் 2. விற்பந்தரமாம் மதி 3. மது 4 இத்துடன் பஞ்சகற்பம் 5-ம் சேர்த்து ஆக 9 பொருள் சொல்லப்பட்டுள்ளன.

பெருவாழ்வுப் பாடிகள் 43 ஐயும் ஒரு பாடல்குறிக்கிறது. அது 'மண்ணாதி ஐம்பூத வகையிரண்டு' என்று தொடங்கும் பாடல் சுத்த பஞ்ச பூதம் அசுத்த பஞ்ச பூதம் என்ற இரண்டையும் இந்தத் தொடர் குறிக்கிறது. சாதகர்களுடைய உடம்பில் அசுத்த பஞ்சபூதமும் சாத்தியர்கள் உடம்பில் சுத்த பஞ்ச பூதமும் அமைகின்றன. இவை எப்படி அமைகின்றன? இதை மூன்றைந்து, நாலொரு முன்றெட்டு — $15 + 4 + 24 = 43$ படிகள் என வருகிறது. இதன் உண்மைப் பொருளை சுத்த சன்மார்க்க சாத்தியர் மட்டுமே உணர்ந்து கொள்ள முடியும். இவற்றையே ஞான சரியையில் உள்ள 28 பாடல்களும் விளக்கி கூறுகின்றன. இதைப் படிக்கும் அன்பர்கள் இவற்றை நன்கு உணர்ந்து அதன்படி நடந்து மரணமில்லாப் பெருவாழ்வை பெறவேண்டும் என வேண்டுகிறோம். இதில் உள்ள 28 பாடல்களையும் நான்கு பகுதிகளாக பிரித்துச் செய்ய வேண்டும். அவை.

1) தனி உலக அனுபவ அளவியல்
2) பொது உயிர் அனுபவ இலக்கண இயல்
3) புது அருள் அனுபவ பயிற்சி இயல்
4) அறிவு இறை அனுபவ பயன் இயல்

என்பன இவற்றுள் 3-வது இயல் மற்ற மூன்று இயல்களின் கருத்துக்களை வாழ்க்கையில் மேற்கொள்ள வழிகாட்டுகிறது.

வடலூர் முத்துராமலிங்கம்
சென்னை-91

# பதிப்புரை

வள்ளல் பெருமான் பாடிய 'ஞான சரியை' பாடல்கள் 28க்கும் சன்மார்க்க பேரறிஞர் திரு. வடலூர் முத்துராமலிங்க ஐயா அவர்கள் உரை எழுதியிருக்கிறார்கள். அவர்கள் பிறந்த ஊர் ''கல்யாண ஓடை.'' என்ற சிற்றூர். தஞ்சை மண் தந்த செல்வர் தமிழும் ஆங்கிலமும் கசடறக் கற்ற மேதை அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் ஆராய்ச்சி மாணவராகவும் மேலைச் சிவபுரி சன்மார்க்க கல்லூரியில் பேராசிரியராகவும் பணிபுரிந்தவர்கள். 'தொல்காப்பியவளம்' முதலிய பல நூல்களை எழுதியவர்கள். கடந்த 50 ஆண்டுகளாக ''திரு அருட்பா'' வை உற்றுநோக்கி, விளங்காத பல உண்மைகளை, மறைபொருள்களை, மரணமில்லாப் பெருவாழ்வுக்குரிய திறவு கோலை திருவருள் வலத்தால் உணரப் பெற்று நமக்குத் தந்திருக்கிறார்கள். அவர்கள் பிறந்த தேதி 11-3-1907 தந்தையார் பெயர் முத்தையா வல்லாள தேவர் தாயார் பெயர் காமாட்சி அம்மாள் மூத்து ராமலிங்கம் என்கிற தன் பெயருடன் 'வடலூர்' என்று இணைத்துக் கொண்டிருக்கிறார்கள். வடு + அல் + உளர் = வடலூர் குற்றம் இல்லா ஊர் வள்ளல் பெருமான் எப்படிதான் சிற்றம்பலத்திலேயே வாழ்ந்து கொண்டிருப்பதால் சிதம்பரம் ராமலிங்கம் எனப்பெயர் கொண்டார்களோ அவர் திருவடி பற்றிய இப் பேரறிஞரும் வடலூர் முத்துராமலிங்கம் எனத் தன் பெயரை வைத்துக் கொண்டிருக்கிறார்கள். இப் பெரியாரும் மெய்ப்பொருள் பற்றி இன்னும் பல உண்மைகளை உலகத்திற்குத் தர வள்ளல் பெருமான் துணை புரிவாராக.

அன்பன்

தேனப்ப பழநியப்ப தேனப்பன்

கோட்டையூர் 623 106

மரணமில்லாப் பெருவாழ்வு—ஞான சரியை-தனி உலக அனுபவ அளவியல்

முதல் பாடலின் முடிவில் பொற்சபையில் சிற்சபையில் புகுந்தருளும் இதுவே என்று வருகிறது பெற்சபை உலகத்தையும் சிற்சபை உடம்பையும் குறிப்பதை உலகம் நமக்குத் தெரிந்தது. உடம்பு நாம் அறிந்து கொள்ள வேண்டிய பல நுட்பங்களை மறைவாக வைத்திருந்து படிப்படியாக விளங்கச் செய்வது அதனல் தெரிந்ததைக் கொண்டு தெரியாததை விளக்கிக் கொள்வதே அறிவியல். இதுதான் உலக அனுபவத்தின் அடிப்படை அளவாகிறது. 7—வது பாடலின் கடைசி வரி ''உலகியலீர் உன்னிய வாறுற்றிடுவீர் விரைந்தே'' என வருகிறது. இதில் உலக அனுபவத்திற்காக நாம் நினைந்து உணர்ந்த எல்லாவற்றையும் தெளிவாக அளந்து வாழ்க்கையில் மேற்கொள்வதற்கு போதுமான இறைவழிபாடு வேண்டும் என்ற உண்மையை இது குறிப்பிடுகிறது.

1) அ) நினைந்து நினைந்துணர்ந்துணர்ந்து நெகிழ்ந்து நெகிழ்ந்தன்பே
நிறைந்து நிறைந் தூற்றெழுங்கண்ணீரதனால் உடம்பு

ஆ) நனைந்து நனைந்தருளமுதே நன்னிதியே ஞான
நடத்தரசே என்னுரிமை நாயகனே என்று

இ) வனைந்து வனைந் தேத்துதும் நாம் வம்மின் உலகியலீர்
மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம் கண்டீர்

ஈ) புனைந்துரையேன் பொய்புகலேன் சத்தியஞ் சொல்கின்றேன்
பொற் சபையில் சிற்சபையில் புகுந்தருணம் இதுவே.

**கருத்து :**

புற அனுபவமும் நினைவும் உணர்வும் அறிவும் ஒன்றுகிற பொழுது உலகமும் உட ம்பும் துண்டு பட்டு விழாமல் ஒன்றுபட்டு நிற்கும். அக அனுபவம் தோன்றும்.

**பதவுரை :**

1) தொடர்ந்து நினைந்தும் உணர்ந்தும் நெகிழ்ந்தும்
ஊறுகின்ற கண்ணீரில் தொடர்ந்து உடம்பு நனையும் பொழுது

2) இறைவன் அருள் உடம்பில் சுரப்பதும், நல்ல செல்வமாக நிலை பெறுவதும், ஞானத்திரு நடனத்தால் உச்சி குளிர்வதும் ஆகிய அருஞ்செயல்களை செய்து அருள்கின்ற என்னுடைய தலைவனே என்று நாம் தொடர்ந்து இறைவன் பெருமையை சொல்லிப் பாராட்டுவோம்.

3) இந்த புற உலக அனுபவத்திலேயே தோய்ந்து கிடக்கும் அன்பர்களே வருக. நாம் இறவாத பெருவாழ்வில் வாழ முடியும் என்பதை என் வாழ்க்கை அனுபவத்தைக் கொண்டு அறிந்து கொண்டிருக்கிறீர்கள்.

4) இவ்வாறு கனிந்து உருகி இறைவன் புகழை ஏத்துகிற பொழுது நீங்களும் ஆளாகி பொற்சபையாகிய உலகையும் சிற்பபையாகிய உடம்பையும் ஒன்று படுத்தி நிலைத்து வாழும் தருணம் இதுதான். இவ்வாறு சொல்வது அணிந்துரையும் அல்ல, பொய்யும் அல்ல, முழு உண்மையே ஆகும்.

2) அ) புகுந்தருணம் இது கண்டீர் நம்மவரே நான் தான்
புகல்கின்றேன் என்மொழி ஓர் பொய்மொழி என்னுதீர்

ஆ) உகுந்தருணம் உற்ற வரும் பெற்றவரும் பிறரும்
உடைமைகளும் உலகியலும் உற்ற துணை அன்றே

இ) மிகுந்த சுவைக் கரும்பே செங்கனியே கோல்தேனே
மெய்ப்பயனே கைப்பொருளே விலையறியா மணியே

உ) தகுந்தனிப் பெரும்பதியே தயாநிதியே கதியே
சத்தியமே என்னுரை மின் பத்தியோடு பணிந்தே.

**கருத்து :**

கடவுள் அனுபவத்தை அடைவதற்கு உலகனுபவம் உயிர் அனுபவம் அருள் அனுபவம் ஆகிய இந்த மூன்றையும் கடந்து ஆகவேண்டும். இதையே இப்பாடல் உகுந்தருணம் என்கிறது.

**பதவுரை :**

1) உடம்பும் உயிரும் துண்டு பட்டு விழுந்து விடாமல் ஒன்றுபட்டு உயரும் தருணமே வாழ்வு தொடங்கும் தருணம் ஆகும். இதை உண்மையில் நான் அடைந்து சொல்கிறேன் என்பதை நீங்கள் கண்டிருகிறீர்கள். நான் சொல்வது பொய் மொழி என மயங்காதீர்.

2) உற்றாரும் உறவினரும் மற்ற பொருள்களும் விலகுகின்ற தருணம் தெரிந்தால் நாம் அவர்களோடு பிணைந்து நின்றே அழிய மாட்டோம். உறுதிச் சுற்றுமாகிய நீங்களும் நானும் வேறல்ல.

3) கரும்பே கனியயேதேனே மெய்ப்பயனே கைப்பொருளே விலை மதிக்க முடியாத மணியே என்று உயிர்க்குயிராகிய இறைவனைப் போற்றுவோம்.

4) நாம் சிறந்த பக்தியோடு இறைவனை பெரும்பதியே தயாநிதியே, கதியே, சத்தியமே என்று மனம் மொழி மெய்களால் போற்றுவோம்.

3) அ) பணிந்து பணிந் தணிந் தணிந்து பாடுமினோ உலகீர்
பரம்பரமே சிதம்பரமே பராபரமே பரமே

ஆ) துணிந்து வந்த வேதாந்து சுத்த அனுபவமே
துரிய முடி அனுபவமே சுத்த சித்தாந்தமதாய்த்

இ) தணிந்த நிலை பெருஞ்சுகமே சமரச சன் மார்க்க
சத்தியமே இயற்கையுண்மைத் தனிப்பதியே என்று

ஈ) கனிந்துளத்தே கனிந்து நினைந்துரைத்திடில் அப்பொழுதே
காணாத காட்சிஎலாம் கண்டு கொளஎல் ஆகும்.

**கருத்து :**

தொடர்ந்து பணிகின்ற பொழுது ஆணவம் தீருகிறது. இருவினை ஒப்பு என்ற சமரசம் தோன்றுகிறது. சத்திநிபாதம் என்கிற அமுதம் உள்ளும் புறமும் ஊற்றெடுக்கிறது. காணாத எல்லாம் கண்டு கொள்ள முடிகிறது.

**பதவுரை :**

1) தொடர்ந்து பணிந்து அகம்பாவம் தீர்ந்து தணிந்து பாடுங்களேன்!

2) உலகியலீர் புற உலகியலில் கிடந்து துன்புறும் நீங்கள் நம் இறைவனை பரம்பரமே சிதம்பரமே பராபரமே கடவுள் பரமே என்றும் பாடுவீர்.

3) இறைவனை துணிந்து அடையக்கூடிய ஆற்றல் வளம் இறைவனே தரவேண்டும். இதையே சுத்த வேதாந்த அனுபவம் என்றும் துரிய முடி அனுபவம் என்றும் சொல்லலாம்.

4) வேதாந்த நிலையாகிய துரிய நிலையைக் கடந்து இன்பவண்ண மான துரியாதீதமாகிய சித்தாந்த நிலையே என்று இறைவனை அழையுங்கள்.

5) முதல் 6 நிலைகளையும் கடந்து 7-வது நிலைதான் சமரச சுத்த சித்தாநித நிலை ஆகிறது. ஒப்பற்ற கடவுளாகிய இயற்கை உண்மை தனிப் பதியை தொடர்ந்து உயிர்ப்பணி புரிவதன் மூலமே கணித்து துணிந்து கொள்ள வேண்டும். இத்துணிவுதான் உண்மையான கனிவைத் தருகிறது.

6) இவ்வாறு துணிந்தும் கனிந்தும் உரைக்கின்றபொழுது உள்ளத்திலும் உடம்பிலும் தோன்றும் மாசுகளும் தடைகளும் தளர்ந்து போகின்றன. தடை தவிர் காட்சி தோன்றுகிறது. இதுவரை காணுத காட்சி எல்லாம் கண்டு கொள்ளும் நிலை உண்டாகிறது.

4) அ) கண்டதெலாம் அனித்தியமே கேட்டதெலாம் பழுதே
ஆ) கற்றதெலாம் பொய்யே நீர் களித்ததெல்லாம் வீணே
இ) உண்டதெலாம் மலமே உகொண்டதெலாம் குறையே
ஈ) உலகியலீர் இதுவரையும் உண்மை யறிந்த திலிரே
உ) விண்டதனால் என்
ஊ) இனி நீர சமரச சன்மார்க்க மெய்ந்நெறியைக் கடைபிடித்து.
எ) மெய்ப்பொருள் நன் குணர்ந்தே
எண்டகுசிற் றம்பலத்தே எந்தை அருள் அடைமின்
ஏ) இறவாத வரம் பெறலாம் இன்பமுறலாமே.

**கருத்து :**

மரணமில்லாப் பெருவாழ்வுக்குரிய உண்மையை புரிந்து கொள்ளாமல் இறந்து போவதால் என்ன பயன்? திருச்சிற்றம்பலத்தில் விளங்கு அருட் பெருஞ்ஜோதி ஆண்டவரையும் அவர்தம் பெருமையையும் நன்குணர்ந்தவர் தான் அழியாத உடம்பை அடைந்து வாழ முடியும்.

உலக அனுபவத்தை மட்டும் உணர்ந்தவர்களே நீங்கள் முழு உண்மையை இதுவரையிலும் புரிந்து கொள்ளவில்லை.

1) கண்டதெல்லாம் அனித்தியமே எனவே நீங்கள் இதுவரை பார்த்த பொருள்கள் எல்லாம் புற உலக அனுபவத்திற்கே பயன்பட்டிருப்பதால் நிலையானவை அல்ல.

2) நீங்கள் கற்றுக்கொண்ட அனித்திய பொருட்களைப் பற்றிய கல்வி முழுவதும் உண்மை அல்ல. அதன் அடிப்படையில் அடைந்த இன்பம் நிலையற்ற இன்பம்.

3) உணவு என்று நம்பி நீங்கள் உண்டதெல்லாம் நித்திய வாழ்வுக்கு பயன்படாதவை மலமாக மாறி விடுவனவே. நீ கற்றிருக்கும் கல்வியை குறையற்றது என எண்ணி ஏமாறக் கூடாது.

4) மேலே குறித்த பயனற்ற பொருட்களையும் செய்திகளையும் கொண்டு நீங்கள் அடைவதெல்லாம் மரணமே. அதனால் என்ன பயன்? இனி சமரச சுத்த சன்மார்க்க நெறியை பின்பற்றி இயற்கை உண்மையாகிய இறைவனை நன்கு புரிந்து கொண்டு இயற்கை விளக்கமாகிய இந்த உடம்பை நித்தியமாக்கிக் கொண்டு பேரின்பம் பெற்று நிலைத்து வாழலாம்.

5) அ) இன்புறலாம் எவ்வுலகும் ஏத்திட வாழ்ந்திடலாம்
எல்லாம் செய் வல்ல சித்த இறைமையும் பெற்றிடலாம்

ஆ) அன்புடையீர் வம்பின் இங்கே சமரச சன்மார்க்கம்
அடைந்திடுமின் அகவடிவில் கனக வடிவாகிப்

இ) பொன் புடைகள் கொளிர் தனியே புத்தமுதே ஞான
பூரணமே ஆரணத்தின் பொருள்ள முடி மேல் பொருளே

ஈ) வன்புடையார் பெறற்கரி தாம் மணியே சிற் சபையின்
மாமருந்தே என்றுரை மின் தீமையெல்லாம் தவிர்ந்தே.

**கருத்து :**

அன்புடையவர் மட்டுமே அடையக் கூடியது பெருவாழ்வு. உயிர்களுக்கு துன்பம் செய்கிற கொடியவர் (வன்புடையார்) அடைய முடியாத மாமணிதான் அருட்பெருஞ்ஜோதி இதை அடைந்தவர் இன்பமயமாக மாறுவதால் துன்பம் அவர்களை நெருங்குவதில்லை.

1) எல்லா உலகமும் பாராட்டும்படியாக பேரின்பத்தை அடையலாம். எல்லா அருஞ்செயல்களையும் புரியக்கூடிய கடவுள் தன்மையும் பெறலாம்.

2) அன்புடையவர்களாகிய நீங்கள் மட்டுமே சமரச சுத்த சன்மார்க்கத்தை அடைய முடியும். அதன் பயனாக அகவடிவு என்கிற அறிவுடம்பு படிப்படியாக உள்ளிருந்து விரிவடைந்து அழியாத அனக வாழ்வு ஆகிறது.

3) உள்ளேயிருக்கின்ற அழியும் பொருளெல்லாம் அழியாத தங்கம் பொருளாக தங்கமாக மாறுவதால் தூய தேகமும் சூட்சும தேகமும் (பருவுடம்பும் நுண்ணுடம்பும்) ஒன்று சேர்ந்து ஓங்கார உடம்பாக மாறுகிறது. அதனல் நம்மை அழிக்கிற ஆங்காரம் தீருகிறது. இவ்வாறு பொன்வண்ணமாக நிலை பெற்ற பிறகு சுத்த வடிவும் சுக வடிவும் ஒன்றாகி சித்து வடிவு என்கிற ஞான வடிவு உருவாகிறது. உடம்பில் அமுதம் ஊறி நித்திய நிலையை கொடுத்த பிறகு பரிபூரணமாகிய வாழ்க்கை உருவாகிறது. இதுவே செருக்கு என்கிற வேதாந்தத்தைக் கடந்து எல்லா உயிரையும் தாராளமாகக் காப்பாற்றுகிற சித்தாந்தநிலை உருவாவதை குறிக்கிறது. இதனால் இறுகிய மனதையும் உடலையும் மாற்றி மரணநிலை மாறுகிறது. இளகிய வாழ்க்கை நிலை அமைகிறது.

4) சிற்சபையில் இறைவன் (உச்சியில் இருந்து நம்மை உயர்த்த உயர்த்த இறுகிய உள்ளம் கடந்து பெருவாழ்வு உருவாகிறது. இதன் விளைவு தான் நாம் செய்திருக்கும் தீமையெல்லாம் தானே விலகி விடுவது ஆகிறது.

6) அ) தீமைஎலாம் நன்மை என்றே திருஉளங்கொண் டருளிச்
சிறியேனுக் கருளமுதத் தெளிவளித்த திறத்தை

ஆ) ஆமயந்தீர்த் தியற்கை இன்ட் அனுபவமே மயமாய்
அம்பலத்தே விளங்குகின்ற அருட்பெருஞ்ஜோதியை ஓர்
ஓமயவான் வடிவுடையார் உள்ளகத்தே நிறைந்த
ஒரு பொருளைப் பெருங்கருணை உடைய பெரும் பதியை

இ) நாமருவி இறவாத நலம் பெறலாம் உலகீர்
நல்ல ஒரு தருணம் இது வல்லை வம்மின் நீரே.

**கருத்து :**

ஆமயம் உள்ளவர்கள் ஆணவம் உடையோர்கள், ஓமயம் உள்ளவர்கள் அனுபவம் உடையோர்கள். (வல்லை = விரைவில் ; மருவி = அன்பு காட்டி) ''ஆங்காரம் அற்று அனுபவம் கைகூடா'' என்பது திருமந்திரம்.

இந்தப்பாடலின் கருத்து ஆணவத்தால் தீமை உண்டாகிறது. ஓமயத்தால் தீமையெல்லாம் தானே தீர்ந்து அமுதம் சுரக்கிறது.

1) தீமை வேறு நன்மை வேறு என்று கூறி திண்டாடும் நிலை மலபரிபாபத்துடன் முடிவடைந்துவிடுகிறது. அதனால் இருவினை ஒப்பு என்ற சமரசத்தையும் சத்தினிபாதம் என்கிற அமுதத் தெளிவையும் அளித்த அருட் பெருஞ்ஜோதி ஆண்டவரே.

2) ஆங்காரத்தால் உண்டாகிற தீமையை போக்கிய உடனே உயிரை இயக்குகின்ற இறைவன் உயிரைத் தன் உடமையாக ஏற்கின்றூர். அதனால் ஆமயம் ஓமயமாக மாறுகிறது. ஆணவம் அனுபவமாக மலர்கிறது. ஓமயம் என்பது எங்கும் பரவி இருக்கும் வான்மயம். இவ்வாறு எங்கும் பரவி எல்லாம் வல்லவராக விளங்கும் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவராகிய தங்கள் கருணையே என்னைக் காப்பாற்றியது.

3) உலகத்தில் உள்ள அன்பர்களே இறைவனிடம் அன்பு காட்டுவதற் கென்று துணிந்து நாம் உயிர்ப்பணி செய்யும் ஒழுக்கத்தை மேற்கொண்டால் முத்திறல் வடிவமாகிய பெருவாழ்வைப் பெறலாம். விரைந்து வாருங்கள் நீர்மை உடையவர்களே.

7) அ) நீர் பிறரோ யான் உமக்கு நேய உறவலனோ
நெடு மொழியே உரைப்பன் அன்றிக் கொடுமொழி சொல்வேனோ

ஆ) சார்புறவே அருளமுதம் தந்தெனை மேல் ஏற்றித்
தனித்த பெருஞ்சுகம் அளித்த தனித்த பெரும் பதிதான்

இ) சீர் பெறவே திருப்பொதுவில் திருமேனி தரித்துச்
சித்தாடல் புரிகின்ற திருநாள்கள் அடுத்த

ஈ) ஓர்புறவே இது நல்ல தருணம் இங்கே வம்மின்
உலகியலீர் உன்னியவா றுற்றிடுவீர் விரைந்தே.

**கருத்து :**

இறைவனுடைய திருவிளையாடலில் முதன்மையானது உயிர்ப்பணி செய்பவரை அணைத்துக் கொள்வதுதான். அத்தகைய அன்பர்களுக்குத் தேவை யான ஒன்றைத் தருவதற்கென்றே இறைவன் எடுக்கின்ற உருவத்திற்குத் தான் திருமேனி என்று பெயர். இச் செய்யுள் நேய உறவினருக்கே இறைவன் திருமேனி தரித்து வருகிறார் என்பதே.

1) நான் வேறு நீ வேறு அல்ல. நான் உங்களுடைய நேய உறவினன். அதனால் உங்களை நிலையாக வாழ்வதற்கு வழிகாட்டும் நீண்ட வாழ்வைத் தருகின்ற அன்பு மொழியே நான் கூறுவது. துன்பம் தருகின்ற அன்பு மொழியே நான் கூறுவது. துன்பம் தருகின்ற கொடு மொழியல்ல.

2) இந்த உண்மையை என் வாழ்வில் இருந்தே நீங்கள் புரிந்து கொள்ளலாம். எல்லா வகையிலும் என்னைத் தன் கைப்பிள்ளையாக எடுத்து நான் விரும்பிய வடிவத்தையெல்லாம் காட்டி எனக்கு பெருவாழ்வு அளித்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் இதோ வருகிறார்.

3) சிறப்புடைய பேறுகளையெல்லாம் நீங்கள் பெறுவதற்கென்றே இறைவன் திருமேனி தரித்து வந்து சித்தாடல் புரிய தயாராக இருக்கின்றார்.

4) இனி வருகின்ற நாட்களெல்லாம் பெருவாழ்வு நல்கும் திருநாட்களே ஆகும். நீங்கள் எண்ணியதை எண்ணியபடி அடைந்து வாழ்வதற்கு விரைந்து வாருங்கள். இது மிக விரைவில் நடைபெறப்போகிறது.

பொது உயிர் அனுபவ இலக்கண இயல்

எட்டாவது பாடலின் முடிவில் கரைந்து என்ற தொடக்கத்தை உடைய சொற்றொடர் வருகிறது. இறைவனை வழிபடும் பொழுது நிலையான இன்பத்தை அடைவதால் நிலையற்ற போலி இன்பம் நம்மை விட்டு அகன்று விடும் என்ற நம்பிக்கை வளருகிறது. இதனால் உடம்பையும் மனதையும் கடந்து உயிர் மட்டும் அனுபவிக்கிற அனுபவம்தான் வாழ்க்கையின் உண்மையான இலக்கணம் என்பதை புரிந்து கொள்ளமுடிகிறது. காரணம் நரை திரை மூப்பு சாக்காடு என்ற நான்கையும் கடந்து நிலையான வாழ்க்கையை பெறுவதற்கு உடம்பும் மனமும் ஆளாவது போதாது. உயிர்ப்பிணி நீங்கி உயிர்ப்பணி புரிந்து உயிரும் ஆளாக வேண்டும். இதையே தனு கரணாதிகள் தாம் கடந்து அறியும் ஓர் அனுபவமாகிய அருட்பெருஞ்ஜோதி' என்கிறது திரு அகவல் பதினாலாவது பாடலில் 'ஊன்ஏயும் உடல் அழியாது' என வருகிறது. இது மரணமில்லாப் பெருவாழ்விற்கு இலக்கணம் கூறுகிறது. உடம்பும் மனமும் உயிரும் ஒன்றுபட்டு நிலைபெறுவதுதான் பெருவாழ்வு. இவற்றுள் (தூய தேகம்) உடம்பை உருவம் உடையது என்றும் மனதை அருவுருவம் என்றும் உயிரை அருவம் எனவும் ஞானயோகிகள் குறிப்பிடு கிறார்கள். இம்மூன்றும் தனி உடம்பாக மாறிய பிறகு முறை வெள்ளொளி உயிரொளி உள்ளொளியாக மாறி இணைபிரியாமல் இருக்கின்றன. பண்படாத நம் கண்களுக்கு இம்மூன்றும் புலப்படா.

8) அ) விரைந்து விரைந்தடைந்திடுமின் மேதினியீர் இங்கே
மெய்மை உரைக்கின்றேன் நீர் வேறு நினையாதீர்

ஆ) திரைந்து திரைந்து உளுத்தவரும் இளமை அடைந்திடவும்
செத்தவர்கள் எழுந்திடவும் சித்தாடல் புரிய

இ) வரைந்து வரைந்தெல்லாஞ்செய் வல்ல சித்தன் தானே
வருகின்ற தருணம் இது வரம் பெறலாம் நீவிர

ஈ) கரைந்து கரைந்து உளம் உருகிக் கண்களின் நீர் பெருகிக்
கருணை நடக் கடவுளை உட்கருதுமினோ களித்தே.

**கருத்து :**

தக்க உணர்வற்ற நிலையில் உள்ளவர்களை எல்லாம் திரும்பவும் மனிதர்களாகவும் மாமணிகளாகவும் உயர்த்துவதுக் கென்று அவர்கள் ஆளாகும் தருணத்தே இறைவன் வருகின்றார். இத்தருணம் இவ்விடம் என்பன உணர்வற்றவர் உருகிப்பெருகும் காலத்தையும் இடத்தையும் குறிக்கும்.

1) உலக அனுபவம் மட்டும் உடையவர்களே விரைந்து வாருங்கள் நான் சொல்வது பரிபூரணமான உண்மை. இதில் சிறிதும் பொய்மை இல்லை.

2) நரை திரை மூப்பு அடைந்தவர்கள் கூட மிக விரைவிலே இளமை வளம் பெறச் செய்வதற்கும் தக்க உணர்வற்றவைகளை உயர்த்துவதற்கும் அருஞ்செயல் புரியவும்.

3) நாம் விரும்புகின்ற அனைத்தையும் நமக்கு அருள் புரிவதற்கும் ஏற்ற திருவருள் வல்லபம் உடைய ஆண்டவர் வந்தருள்கிற தருணம் இது.

4) கருணைத் திருநடம் புரியும் கடவுளை மனதில் நிலை பெறச்செய்து கொண்டு உள்ளம் தூய்மையாகி உருக்கம் வளர்ந்து கண்ணீர் பெருகினால் பெருவாழ்வு பெற்று மகிழலாம்.

9) அ) களித்துலகில் அளவிகந்த காலம் உலகெல்லாம்
களிப்படைய அருட்ஜோதிக் கடவுள் வரு தருணம்

ஆ) தெளித்திடுமாத் தருணம் எதோ என்னாதீர் இதுவே
செத்தவரை எழுப்புகின்ற திகழ் தருணம் உலகீர்

இ) ஒளித்துரைக்கின்றேன் அலன் நான் வாய்ப் பறை ஆர்க்கின்றேன்
ஒரு சிறிதும் அச்சமுறேன் உள்ளபடி உணர்ந்தேன்

ஈ) அளித்திடு சிற்றம்பலத்தென் அப்பன் அருள் பெறவே
ஆசை உண்டேல் வம்மின் இங்கே நேசமுடையீரே

**கருத்து :**

இவ்வுலகில் நாம் வாழ்ந்து கொண்டிருக்கும் போதே எந்தக் கணமும் பெருவாழ்வு பெற்று எங்கும் நிலைத்துவிடலாம். அதை அடைவது வேறு எங்கோ எப்போதோ என்று எண்ணி ஊசலாட வேண்டாம். இவ்வுலகிலேயே நீங்கள் ஆளாகின்ற இந்த தருணத்திலேயே அந்தப் பெருவாழ்வைப் பெற்று நிலை பெறலாம். அதற்கே இறைவன் நம்மை அணுகுகிறார்.

1) அருட்ஜோதிக் கடவுள்—சுத்த தேகத்தை வழங்குகின்ற அருட்ஜோதி ஆண்டவர் நம் உள்ளமும் உடம்பும் ஒன்றாகி பண்படுகிறபோது வருகிறார்.

2) உலக அனுபவம் மட்டும் உடையவர்களே நீங்கள் பரிபூரணமான தெளிவை அடைந்து நித்திய வாழ்வை பெறும் நேரம் எதுவோ என்று சந்தேகப்பட வேண்டாம்.

3) இப்படி நான் சொல்லுவதை மறைத்து சொல்லுவதாக எண்ணுதீர்கள். அவ்வாறு எண்ணினால் அச்சத்தினால் தடுமாறுவதாகவே முடியும். எனக்கு அச்சம் பூஜ்யம். எனவே சிறிதும் சந்தேகப்படாமல் வந்து தக்க தருணத்தில் பெற வேண்டியதைப் பெற்றுக்கொள்ளுங்கள்.

4) நீங்கள் விரும்புகின்ற பெரு வாழ்வை தவறாமல் தருகின்றவராகிய அருட்பெரும்ஜோதி ஆண்டவர் வருகின்ற தருணம் இதுவே என்பதை அவரிடம் நிரம்ப அன்புடைய (நேசமுடைய) தாங்களே தெரிந்து கொள்ள முடியும்.

குறிப்பு :

நேசம் என்பது நேயம் என்ற சொல்லின் வேறு வடிவமே. நேயம் என்பது உள்ளும் புறமும் நிரம்பிய அன்போடு எதையும் நெய்து (செய்து) கொள்ள முடியும். நேயம் ஐந்து வகை ஆகும்.

1) இந்திரிய நேயம்
2) கரண நேயம்
3) ஜீவ நேயம்
4) ஆன்ம நேயம்
5) சிவ நேயம் (அருட்பெரும் ஜோதி ஆண்டவரிடத்தில் உறுதியாக கொள்ளுகின்ற பற்று)

10) அ) ஆசை உண்டேல் வம்மின் இங்கே அருட்சோதிப் பெருமான்
அம்மையுமாய் அப்பனுமாய் அருளும் அருளாளன்

ஆ) ஏசற நீத் தெனை ஆட்கொண்டெண்ணியவாறளித்தான்
எல்லாஞ் செய் வல்ல சித்தன் என்னுயிரில் கலந்தான்

இ) தேசுடைய பொதுவில் அருள் சித்திநடம் புரியத்
திருவுளங்கொண் டெழுந்தருளும் திருநாள் இங் கிதுவே

ஈ) மோசஉரை என நினைத்து மயங்காதீர் உலகீர்
முக்காலத்தினும் அழியா மூர்த்தம் அடைந்திடவே.

**கருத்து :**

தொல் உடம்பு கதி உடம்பு மதி உடம்பு இயல் உடம்பு ஆகிய பெருவாழ்வு வாழ்வதற்குரிய நிலையில் உயிரோடு இறைவன் ஒன்றி நிற்பான். விரைந்து விரும்பி வாருங்கள்.

1) அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் தன்னை நோக்கியவர்களிடத்தே வரப் போகிறார். அவர் இருபாலர்க்கும் குழந்தைகளுக்கும் அருள் புரிவதற்கென்றே அம்மை அப்பன் ஆகி அர்த்த நாரீஸ்வரர் வடிவத்தில் வருகிறார்.

2) எல்லாம் வல்ல ஆற்றலை உடைய இறைவன் என்னுடைய உயிரில் பரிபூரணமாக கலந்து நிற்கிறான். நான் நீக்கத்தக்கவற்றையெல்லாம் நீக்கி நிலை பெற்ற வாழ்வில் நாள் எண்ணியபடியெல்லாம் செய்ய ஆற்றல் கொடுக்க வந்திருக்கிறார்.

3) ஒளி நிரம்பிய சூழ்நிலையில் என்னை உயர்த்தி எல்லாம் செய்வதற்குரிய ஆற்றலையும் எனக்கு வழங்கி இந்நாள் தொட்டு எந்நாளும் பெருவாழ்வுக்குரிய திருநாளாகவே மாற்றியவன் என் இறைவன்.

4) என் அனுபவத்தை இவ்வளவு விளக்கி உங்களுக்கும் சொல்லியும் இதை மோச உரை என எண்ணி மயங்கி விடாதீர்கள். அவ்வாறு மயங்கினால் எக்காலத்திலும் அழியாத பெருவாழ்வைப் பெறுவதற்கு உரிய வாய்ப்பை இழந்துவிட நேரும்.

**குறிப்பு :**

மூர்த்தம் என்ற சொல் அழியாத உடம்புக்குரிய பல பெயர்களில் ஒன்று. இயல் உடம்பு கதி உடம்பு மதி உடம்பு இன்னும் பல பெயர்களும் இருக்கின்றன.

11) அ) அடைந்திடுமின் உலகீர் இங்கிது தருணம் கண்டீர்
அருட்சோதிப் பெரும்பதி என் அப்பன் வரு தருணம்

ஆ) கடைந்த தனித் திருவமுதம் களித்தருத்தி எனக்கே
காணாத காட்சி எலாம் காட்டுகின்ற தருணம்

இ) இடைந்தொரு சார் அலையாதீர் சுகம் எனைப் போல் பெறுவீர்
யான் வேறு நீர் வேறென் றென்னு கிலேன் உரைத்தேன்

ஈ) ஊடைந்த சமயக் குழி நின் றெழுந்துணர் மின் அழியா
ஒரு நெறியாம் சன் மார்க்கத் திருநெறி பெற்று வந்தே.

கருத்து :

இறைவன் நான் பண்பட்டு இருக்கும் இத்தருணம் இங்கே தோன்றி எனக்கு பெருவாழ்வு வழங்கி இருப்பது போல அனைவருக்கும் வழங்கவே இருக்கிறார் மகிழ்ச்சியோடு வாருங்கள்.

1) இந்த நேரத்தில் உலக சூழ்நிலையைக் கடத்து நம்மை உயர்த்துவதற்கு என்று என் தந்தை அருட் பெருஞ்ஜோதி ஆண்டவர் வருகின்ற தருணம் இது, நீங்கள் வந்தால் உங்கள் விருப்பப்படியே பெருவாழ்வை நீங்களும் அடைவீர்கள்.

2) இத்தகைய தருணத்தில் தான் அமுத நிலைக்கு உயர்த்தி என்னையும் நிலைத்து வாழ செய்திருக்கிறார்.

3) நீங்களும் வந்தால் இதுவரையில் அடையாத அனுபவங்கள் அடையலாம். வேற்று எண்ணங்களால் நெருக்கப்பட்டு உங்களுக்கு கிடைக்க வேண்டிய பெரும் பேற்றை இழந்து விடாதீர்கள். அவ்வாறு இழந்து விட்டால் இன்னும் பல காலம் அலைந்து கொண்டே இருக்க நேரும். நீங்கள் வேறு நான் வேறு என்று நான் எண்ணவில்லை. அதனால் நான் பெற்ற இன்பமே நீங்களும் பெறவேண்டும் என்று நினைத்தே சொன்னேன்.

4) நீங்கள் இவ்வாறு நான் பெற்ற அனுபவத்தைப் பெற முடியாது என்று நினைத்து வீண் போவதற்கு காரணமும் உண்டு. அதுதான் சமயக் குழியில் நீங்கள் அடிக்கடி வீழ்ந்துவிடுதல். அவ்வாறு வீழ்ந்து கெடாமல் எழுந்து எல்லாம் உயிர்களுக்கும் இறைவன் ஒருவனே என்று நம்பி வந்தால் நான் பெற்ற பேற்றை நீங்களும் உறுதியாக பெற்று மகிழலாம்.

12) அ) திரு நெறி ஒன்றே அதுதான் சமரச சன்மார்க்கம்
சிவநெறி எண்றுணர்ந்துலகீர் சேர்ந்திடுமின் ஈண்டு

ஆ) வருநெறியால் எனையாட் கொண்டருளமுதம் அளித்து
வல்லப சத்திகளெல்லாம் வழங்கிய ஓர் வள்ளல்

இ) பெருநெறியில் சித்தாடத் திருவுளங் கொண்டருளிப்
பெருங்கருணை வடிவினொடு வருதருணம் இதுவே

ஈ) கருநெறி வீழ்ந்துழலாதிர் கலக்கமடையாதீர்
கண்மையினால் கருத்தொருமித் துண்மை உரைத்தேனே.

கருத்து :

உலக வாழ்விலேயே முழு நேரத்தையும் வீண்போக்கிவிடாமல் பெருங்

கருணையோடு இறைவன் வருகின்ற இந்த தருணத்தில் நீங்கள் வந்து நிலையான வாழ்வைப் பெற வேண்டும் என்பதற்காகவே இதனைச் சொல்கின்றேன்.

1) திருமெய்ப்பொருள் நெறி ஒன்றுதான் சிறப்பு உண்மை நெறி என்பதை உணர்ந்து இதையே சிவநெறி என்று நம்பி இங்கே வந்திடுங்கள்.

2) எனக்கு நித்திய வாழ்வு வழங்கிய வள்ளல் எல்லா வல்ல சித்திக ளெல்லாம் அடையும்படி அருள் புரிந்திருக்கிறார்.

3) பெருவாழ்வு தருகின்ற பெருநெறியில் அருஞ்செயல் புரிவதற்கென்றே பெருங்கருணை வடிவோடு இறைவன் வரும் தருணம் இதுவாகின்றது.

4) இந்த உண்மையை உணர்ந்து, வருவதற்கு, தடை செய்வது ஒன்றே. அதுதான் மருள் இனம், பெருக்கும் கருநெறி. அந்த கருநெறியில் வீழ்ந்து ஆழ்ந்து விடாமல் வருக. அவ்வாறு வீழ நேர்ந்தால் கலக்கமே அடைவீர்கள். நான் உங்களிடத்தில் வைத்த இரக்கத்தால் நீங்கள் அடைய வேண்டியதை என்ன என்பதை உணாந்து இதைச் சொல்கிறேன். இதுவே உண்மை.

**குறிப்பு :**

கரு என்ற சொல்லுக்கு குழந்தை உருவாகின்ற வளரும் கரு என்ற பொருள் ஒன்று. மற்றொன்று இருள் நெறி. கரு நாள் கருவாய் முதலிய சொற்றொடர்களில் கரு என்பது இருளையும் தீமையையும் குறிக்கிறது. உலக அனுபவத்தைக் குறிக்கின்ற அணுபக்ஷ இனப்பெருக்கம் வேறு. சர்பு பக்ஷ இனப்பெருக்கத்தின் உயிர் அனுபவத்தின் தொடக்கம் வேறு விபு பக்ஷ இனப் பெருக்கத்தின் அருள் அனுபவத்தின் தொடக்கம் வேறு இந்த மூன்றையும் வள்ளல் பெருமான் உபதேசித்தில் 7 படிகளாக விரித்து விளங்குகின்றார்.

13) அ) உண்மையுரைக்கின்றேன் இங்குவந்தடை மின் உலகீர்
உரை இதனில் சந்தேகித் துளறிவழி யாதீர்

ஆ) எண்மையினாள் என நினையீர் எல்லாம் செய் வல்லான்
என்னுள் அமர்ந்திசைக்கின்றாள் இதுகேண்மின் நீவிர்

இ) தண்மையொரு சுத்தசிவ சன்மார்க்க நெறியில்
சார்ந்துவிரைந் தேறுமினோ சத்தியவாழ்வளிக்கக்

ஈ) கண்மைதரும் ஒருபெருஞ்சீர்க் கடவுள் எனப் புகலும்
கருணைநிதி வருகின்ற தருணம் இதுதானே.

**கருத்து :**

நான் சொல்வது முழு உண்மை. இதற்குக் காரணம் எல்லாம் வல்லவனே என்னுள் இருந்து சொல்லுகிறான். எனவே விரைந்து, மகிழ்ந்து வந்து, பயன் அடைவீர்.

1) நான் சொல்லுவது உண்மை, தவிர வேறு எதுவுமில்லை. நீங்கள் சந்தேகித்து வீண் போகாதீர்கள்.

2) நான்தான் சொல்லுகின்றேன். என்று எண்ணி விடாதீர்கள். எல்லாம் வல்லவனே என்னுள் இருந்து சொல்லுகிறான். எனவே சந்தேகப் படாமல் விரைந்து வந்து பயன் அடையுங்கள்.

3) நீங்கள் முயலுகின்ற முயற்சி சுத்த சன்மார்க்கம் என்கின்ற சிறப்பு உண்மை நெறியில் அமைந்திட வேண்டும் வேறு வழி எதுவும் இதற்கு இடம் தருவதில்லை.

4) இரக்கமே உருவான இறைவன் வந்து பரிபூரணமான நித்திய வாழ்வை தருகிற சிறந்த தருணம் இதுதான்.

**குறிப்பு :**

சன்மார்க்கம் மூன்று வகைப்படும். அவற்றுள் ஒன்று தனி உண்மை நெறி என்கின்ற ஆணவம் நிறைந்த கேவல சன்மார்க்கம் ஆகும். மற்றொன்று அச்சம் மட்டும் ஓரளவு தோன்றுகிற சகல சன்மார்க்கம் என்கின்ற பொது உண்மை நெறி ஆகும். மூன்றாவது ஆணவமும் அச்சமும் அற்ற கடவுள் மயமாகின்ற சுத்த சன்மார்க்கம் ஆகும். இதனையே சிறப்பு உண்மை நெறி என்றும் சிறப்பு ஒளி நெறி என்றும் சான்றோர்கள் பேசுவார்கள்.

14) அ) தானேதான் ஆகி எலாம் தானாகி அலனாய்த்
தனிப்பதியாய் விளங்கிடும் என் தந்தையை என் தாயை

ஆ) வானே அவ் வான் கருவே வான்கருவின் முதலே
வள்ளால் என் றன்பரெலாம் உள்ளாரின்றவளைத்

இ) தேனே செம் பாகே என் றினித் திடுந்தெள்ளமுதைச்
சிற்சபையில் பெருவாழ்வைச் சிந்தை செய்மின் உலகீர்

ஈ) ஊனேயும் உடலழியா தூழிதொறும் ஒக்கும்
உத்தம சித்தியைப் பெறுவீர் சத்தியம் சொன்னேனே.

**கருத்து :**

இறைவன் எப்போதும் உடம்பினுள் இருந்தாலும் உயிர் மனம் உடம்பு

என்ற மூன்றும் துண்டு பட்டு விழாமல் ஒன்று பட்டு உயரும்படி இம்மூன்றையும் இணைப்பதே பெருவாழ்வு. அவ்வாறு நெருங்கும்படி இறைவனை கனிவோடு வேண்டிக் கொள்ளுங்கள். இறைவன் ஒன்றாய், வேறாய், உடனாய் இருக்கின்றான் என்பர்.

1) உலகம் முழுவதும் தானாக விளங்கி அவ்வுலகில் உள்ள அனைத்துயிர்களுக்குள்ளும் தானே இருந்து, அந்த உலகமும் உயிரும் தான் அல்ல என்று தோன்றும்படி தனித்து நின்று எல்லா உலகுக்கும் வேண்டிய அனைத்தும் அதில் பதியும்படி செய்கின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் என் தந்தையாகவும் தாயாகவும் தோன்றி அருள்புரிந்திருக்கிறார்.

2) வான் என்பது எங்கும் பரவியிருக்கும் வானமாக அவன் விளங்குகின்றான். அந்த வானத்தை உருவாக்கிய கருப்பொருளாகவும் இருந்து விளங்குகிறான். அவ்விரண்டுக்கும் முதல் பொருளாகவும் அவனே இருக்கின்றான். இவ்வாறு இருக்கின்ற இறைவனை எல்லாவற்றையும் வழங்க வல்லவன் என்று சான்றோர்கள் வழிபடுகின்றார்கள்.

3) உலகத்தில் உள்ளவர்களே-எங்கும் இருந்து எல்லாம் வல்லவனாக விளங்கும் ஆண்டவனை தேனே என்றும் பாகே எனினும் இனிய தெள்ளமுதே எனினும் போற்றுங்கள். இறைவன் ஒவ்வொருவர் உச்சியிலும் திருச்சிற்றம்பலத் தெய்வமாக விளங்குகின்றான். இவ்வாறு தொடர்ந்து நினைந்து சிந்தித்தும் வாழ்ந்தால் பெருவாழ்வை வழங்குவான்.

4) இவ்வாறு தொடர்ந்து நினைந்து வந்தால் உடம்போடு வாழ்கின்ற பெருவாழ்வை நீங்கள் அடைந்து உய்வது உறுதியாகும். இதுவே உத்தம சித்தியாகிறது. நீடூழி வாழ்வதும் இதுதான்.

புது அருள் அனுபவ பயிற்சி இயல்

இதில் உள்ள 7 பாடல்களுமே மாற்ற பாடல்களை சுருக்கி செயல் படுத்துவதற்கு வழிகாட்டுவன. 15-வது பாடலில் ''சிந்தை செய்து வாழ்த்துதுமினோ நிந்தை எலாம் தவிர்ந்தே'' என வருகிறது. இறை அருளைப் பெறுவதற்கு உயிர்ப்பணி நன்றே பயிற்சியாகும். இப்பயிர்ச்சியில் சிறிதும் நிந்தை கலவாது அது விளங்கவேண்டும். நிந்தையிலும் இருவகை உண்டு. உபகார நிந்தை அபகார நிந்தை எனப்படும். இவ்விரண்டுமே அருள் அனுபவத்தில் இடம் பெறக்கூடாது. இதனை 21-வது பாடல் தெளிவாகக் குறிப்பிடுகிறது. இதில் 'உலகம் எலாம் கண்டிடும் ஓர் உளவை அறிந்திளரே' எனவருகிறது. இதில் உள்ள உளவு என்பது எல்லாவகையான அளவுகளையும் கடந்து முழு உண்மையை உணர்த்த வல்லது. வெளிப்படையாக

எல்லாவற்றையும் அளந்துவிடவும் சொல்லி விடவும் முடியாது. ஆனுல் குறிப்பாக உணர்ந்து கொள்ளவும் உணர்த்திடவும் முடியும். இதையே ''வெளிப் படை குறிப்பில் விரிப்பது சொல்லே'' என்பர். இதற்குரிய பயிற்சிதான் வாழ்க்கை பயிற்சி ஆகும்.

15) அ) சத்தியவே தாந்தமெல்லாம் சித்தாந்தம் எல்லாம்
தனித்தனிமேல் உணர்ந்துணர்ந்தும் தனையுணர்ந்தற்
கரிதாய்

ஆ) நித்திய சிற் சபை நடுவே நிறைந்து நடம் புரியும்
நித்தபரி பூரணனைச் சித்த சிகா மணியை

இ) அத்தகையோர் பெரும் பதியை அரும் குந்தை அடியேன்
ஆவியை என் ஆவியிலே அமர்ந்த தயா நிதியைச்

ஈ) சித்தியெலாம் எனக்களித்த சிவகதியை உலகீர்
சிந்தை செய்து வாழ்ந்து மினோ நித்தை எலாம் தவிர்ந்தே.

**கருத்து :**

உண்மையான வேதம் முடிவும் சித்தம் முடிவும் உணர்ந்துணர்ந்து மேலேறும் பொழுது சர்வ சித்தியும் கிடைக்கிறது. அதனால் தீமையெலாம் விலக நம்மையே விளைகிறது.

1) செருக்கை ஒழிக்கின்ற நூலறிவையும் கஞ்சத்தனத்துக்கு முற்றுப் புள்ளி வைக்கின்ற சிந்தனை முடிவையும் கடந்து படிப்படியாக மேலேறும் பொழுது மீதி நான்கு முடிவுகளையும் அறிவதற்கு முன் தன்னை அறிந்து கொள்வது இயலாது.

2) இந்த அருஞ்செயலையும் இறையருளால் அறிந்து மீதி நான்கு முடிவுகளாகிய கலைமுடிவு, யோக முடிவு, போதமுடிவு நாத முடிவு என்ப வற்றையும் கடந்து திருச்சிற்றம்பலம் என்ற பொற்கோவிலை நான் அடையும் படி அருள் புரிந்தார் அருட் பெருஞ் ஜோதி ஆண்டவர்.

3) ஆறு முடிவுகளையும் கடந்த சான்றோர்களின் தலைவராக விளங்கும் அருட் பெருஞ் ஜோதி ஆண்டவர் என் தீமைகள் அனைத்தையும் போக்கும் அரிய மருந்தாகவும் என் உயிருக்கு உயிராக அமர்ந்த கருணாநிதி யாக இருக்கிருர்.

4) எல்லாவகை சித்திகளையும் எனக்கு வழங்கி அருளிய இன்ப வண்ணமாக விளங்கும் இறைவனை உலகியலீர் தொடர்ந்து வாழ்த்துங்கள். இந்த எண்ணம் உயர உயர மற்ற உயிர்களின் குற்றம் காணும் தீய எண்ணம் உங்களை விட்டு விலகி விடும். முழுமையான நன்மையே வடிவாக நிலைத்து விளங்குவீர்கள்.

**குறிப்பு :**

திரு அகவலில் 19வது பாடலிலிருந்து 6 பாடல்கள் ஆறு அந்தங்களின் பயனை விளங்குகின்றன. மாணிக்கவாசகரும் இவற்றை ஆறு கோடிமாயா சக்திகள் என்று குறிக்கிறார். இந்த ஆறையும் கடப்பதுதான் நித்திய வாழ்வைப் பெறுவதாகிறது. கலாந்தம் பொறாமையை நீக்குகிறது. யோகாந்தம் காமத்தை விலக்குகிறது. போதாந்தம் கோபத்தை ஒழிக்கிறது. நாதாந்தம் மோகத்தை (வரம்பு கடந்து ஒரு பொருளை விரும்புவதை) நீக்குகிறது. வேதாந்தம் செருக்கை (ஆணவத்தை) ஒழிக்கிறது. சித்தாந்தம் கஞ்சத்தனத்தை (ஈயாமையை) ஒழிக்கிறது.

16) அ) நிந்தையிலார் நெஞ்சகத்தே நிறைந்த பெருந்தகையை
நிலையனைத்தும் காட்டி அருள் நிலை அளித்த குருவை

ஆ) எந்தையை என் தனித்தாயை என்னிரு கண்மணியை
என் உயிரை என் உணர்வை என் அறிவுள் அறிவை

இ) சிந்தையிலே தனித்தினிக்கும் தெற்றமுதை அனைத்தும்
செய்ய வல்ல தனித்தலைமைச் சிவபதியை உலகீர்

ஈ) முந்தைமல இருட்டொழிய முன்னுமினோ கரண
முடுக்கொழித்துக் கடை மரண நடுக்கொழித்து முயன்றே.

**கருத்து :**

உயிர்களை நிந்திக்கின்ற மனப்பான்மை உடையவர்களிடத்தில் இறைவன் விலகியே நிற்கிறான். இறைவனைத் தன் தந்தையாகவும் தாயாகவும் குருவாகவும் உயிராகவும் உணர்வாகவும் அறிவாகவும் அமுதாக வும் கருதும் பொழுது அனைத்தையும் வழங்குகின்றான். முன்வினைப் பயனையும் ஒழித்து மன நெகிழ்வையும் தந்து மரணத்தையும் நீக்கி விடுகின்றான்.

1) உயிர்களை நிந்திக்கும் மனப்பாங்கு இல்லாதவர்களிடத்து கலந்து நிற்பவன் இறைவன். அவ்வாறு உயிர்களிடத்துக் காட்டும் நெகிழ்ச்சியால் பெருவாழ்வுக்குரிய 43 படியாகிய எல்லா நிலைகளையும் காட்டி அதனை அருள்கின்ற பெருஞ்செயலையும் புரிகின்றவன் இறைவன். இப்படி இறைவனே குருவாகின்றான்.

2) என் வாழ்வையே பெற்று வளர்த்து வருகின்ற அன்னையும் அப்பனுமாக விளங்குகிறவன் இறைவன். அவனே என் இரு கண்களாகவும் உயிர் உணர்வாகவும் அறிவுக்கு அறிவாகவும் விளங்குகின்றான்.

3) நான் தனிமையில் இருக்கும் பொழுது இனிமையே வடிவாக எனக்கு விளங்குபவன். அமுதமாகவும் விளங்கி அனைத்தையும் செய்யவல்ல ஆற்றலையும் எனக்கு அளிக்கின்றவன்.

4) உலக அனுபவத்திலேயே திரியும் அன்பர்களே, உயிர், அருள், இறை அனுபவங்களையும் பெற்று முன் வினையால் எழும் அறியாமை இருளைக் கடந்து அதனால் தீய வழிகளில் செலுத்துகின்ற கரணங்களையும் அடக்கி நெறிப்படுத்தி மரணமில்லாப் பெருவாழ்வை வழங்குகின்றவன். என்னைப் போல இவ்வாழ்வைப் பெற்று நீங்களும் நிலையாக வாழ்வீர்கள்.

17) அ) முயன்றுலகில் பயன் அடையா மூட மதம் அனைத்தும்
முடுகி அழிந்ததிடவும் ஒரு மோசமும் இல்லாதே

ஆ) இயன்ற ஒரு சன்மார்க்கம் எங்கு நிலை பெறவும்
எம்மிறைவன் எழுந்தருளல் இது தருணம் கண்டீர்

இ) துயின்றுணர்ந்தே எழுந்தவர்போல் இறந்தவர்கள் எல்லாம்
தோன்ற எழுகின்ற திது தொடங்கி நிகழ்ந்திடும் நீர்

ஈ) பயின்றறிய விரைந்து வம்மின் படியாத படிப்பைப்
படித்திடலாம் உணர்ந்திடலாம் பற்றிடலாம் சுகமே.

**கருத்து :**

எல்லா உயிர்களையும் நேசிக்காமல் குறிப்பிட்ட ஒரு மதத்தினரை மட்டும் நேசிக்கிறவர்கள், எல்லா உயிர்களுக்கும் தந்தையாகிய இறைவனை அடையமுடியாது. அதனால் சமயக் கணக்கர்களும் மத போதகர்களும் அழிய நேரிடுகிறது. சிறப்பு உண்மை நெறியாகிய சுத்த சன்மார்க்கத்தில் நிற்பவர்கள் மட்டும் மரணமில்லாப் பெருவாழ்வை அடைகின்றனர். இதற்குரிய பயிற்சியும் ஆளாகும் தருணமும் இடமும் அவரவர்க்கு ஏற்ற நிலையில் உண்டாகும்.

1) முழு உண்மையை அறிந்து கொள்ளாததால் எல்லா மதத்தவர்களும் அழுகிறார்கள். காரணம், பிற உயிர்களிடம் வஞ்சகமாக நடந்து கொள்வதுதான்.

2) எந்த வகையிலும் உயிர்களுக்கு மோசம் செய்யாமல் நெகிழ்ந்து உயிர்பணி செய்கிற போதுதான் ஆளாக முடிகிறது.

3) உயிர்ப்பணியால் உண்டாகும் பயன்களில் ஒன்று, மனித உணர்வற்று நடைப்பிணமாக இருப்பவர்கள். உண்மையான மனித உணர்வோடு இயங்கத் தொடங்குவார்கள்.

4) இவ்வாறு உணர்ந்த உடனே பெருவாழ்விற்குரிய பயிற்சியும் பெற்று, பேரின்பப் பெருவாழ்வில் நிலை பெற்று வாழ்வதற்குரிய, காலமும், இடமும், அமைந்திடும்.

18) அ) சுகமறியீர் துன்பம் ஒன்றே துணிந்தறிந்தீர் உலகீர்
சூதறிந்தீர் வாதறிந்தீர் தூய்மையறிந்திலிரே

ஆ) இகம் அறியீர் பரம் அறியீர் என்னேதுங் கருத்த
தென்புரிவீர் மரணம்வரில் எங்குறுவீர் அந்தோ

இ) அகமறிந்தீர் அனகமறிந் தழியாத ஞான
அமுதவடி வம்பெறலாம் அடைந்திடும் ஈண்டே

ஈ) முகமறியார் போலிருந்தீர் என்னை அறியீரோ
முத்தரெல்லாம் போற்றும் அருட் சித்தர் மகன் நானே.

**கருத்து :**

விடுதலை அடைந்த சான்றோர் எல்லோரும் பாராட்டுகின்ற சத்திய ஞான சபையின் தலைவருக்கு நல்ல பிள்ளை நான். எனவே என்னுடைய அனுபவத்தை உங்களுக்கு சொல்கிறேன். உள்ளும் புறமும் ஒத்த வாழ்க்கை தான் அனக வாழ்வு (பெருவாழ்வு). அதனைப் பெறுவதற்கு சூது வாதற்ற தூய உள்ளம் வேண்டும். இதனால்தான் உண்மை இன்பத்தை அடைய முடியும்.

1) உலகத்தவர்களே, நீங்கள் சூது வாது மட்டும் அறிந்திருப்பதால் தூய்மை அற்றவர்களாகவும், இன்பம் இன்னது என்றே புரியாதவர்களாகவும் இருக்கின்றீர்கள்.

2) இகம் பரம் என்பன உலக அனுபவத்தையும் உயிர் அனுபவத் தையும் குறிக்கும். இவ்வேறுபாடு தெரியவில்லை என்றால் மரணம் வந்தே தீரும். அப்போது நீங்கள் எங்கு சென்று என்ன செய்து உங்களை காப் பாற்றிக் கொள்வீர்கள்.

3) அகம் இன்னது என்று அறிந்தால் முழு அறிவும் பெற்றவர் ஆவீர். அகமும் புறமும் ஆகிற அறிவும் நினைவும் போதுமான அளவு பெற்ருல் அனகம் என்கிற பெருவாழ்வை பெற இயலும். இந்த உண்மையை என்னுடைய வாழ்வில் இருந்தே அனுபவித்து உங்களுக்கும் தெரிவிக்கின்றேன்.

4) நான் சான்றோர் அனைவரும் போற்றுகின்ற ஞானசபை தலைவனுக்கு நல்லபிள்ளை என்பதை நீங்கள் நன்கு தெரிந்து கொள்ள வேண்டும். இங்கே வந்தால் நீங்கள் பெறவேண்டிய பெருவாழ்வையும் பெறுவீர்கள். இது உறுதி.

**குறிப்பு :**

அகம் — அறிவு
அகப்புறம் — உணர்வு
புறம் — நினைவு
புறப்புறம் — அனுபவம்

இதனை புறநடுலோடு கடை புனர்பித்து ஒரு முதல் அறம் முற வகுத்த அருட்பெரும் ஜோதி முதலிய 16 பாடல்களில் விளக்கி கொள்ளலாம். இங்க புறநடுலோடு என்பது நினைக்கின்ற மனத்தோடு என்று பொருள் தருகின்றது. கடை புனர்பித்து என்பது உடம்பை சேர்த்து இயங்கும் உயிர் நெறிப் படுகிறது என்பதை இப்பாடலின் பொருள்.

கடை — உடம்பு
ஒடு — மனம்
முதல் — உயிர்

19) அ) நான் உரைக்கும் வார்த்தை எலாம் நாயகன்றன் வார்த்தை
நம்புமினோ நமரங்காள் நற்றருணம் இதுவே

ஆ) வான் உரைத்த மணிமன்றில் நடம்புரி எம் பெருமான்
வரவெதிர் கொண்டவன் அருளால் வரங்கள் எலாம் பெறவே

இ) தேன் உரைக்கும் உளம் இனிக்க எழுகின்றேன் நீவீர்
தெரிந்தடைந்தேன் உடன் எழுமின் சித்திபெறல் ஆகும்.

ஈ) ஏனுரைத்தேன் இரக்கத்தால் எடுத்துரைத்தேன் கண்டீர்
யானடையும் சுகத்தினைநீர் தான் அடைதல் குறித்தே.

**கருத்து :**

நான் இன்ப மயமாக இறைவனை நெருங்கி எழுகின்ற போதெல்லாம் இன்புறுகிறேன். என் மூலமே இறைவன் உங்களிடம் பேசுகிறார். எனவே நான் பெற்ற இன்பம் தாங்களும் பெறலாம் என்று உறுதியாக நம்புங்கள். நான் எழுந்தது போல நீங்களும் எழுகின்ற தருணம் தான் நீங்கள் பெருவாழ்வு பெருகின்ற தருணம் ஆகும்.

1) இதுவே நல்ல தருணம் என்பதை நம்மவர்கள் ஆகிய நீங்கள் உறுதியாக நம்ப வேண்டும். காரணம், நான் சொல்லும் வார்த்தையெலாம் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரின் வார்த்தைகளே.

2) நீங்கள் நம்புவது எதற்காக என்றால் எங்கும் பரவி இருக்கும் இறைவன் நீங்கள் மனம் திரும்பிய உடனே உங்களை நோக்கி வருகின்ருன்.

3) நானும் எப்படி உள்ளம் இன்புறும்படி எழுகின்றேனோ அப்படியே நீங்களும் எழுந்து வாருங்கள். அந்த கணமே நான் பெற்ற பெருவாழ்வை நீங்களும் பெறலாம்.

4) இந்த மாதிரி நான் ஏன் சொன்னேன் என்று எண்ணாதீர்கள். உங்களை ஆட்கொள்வதற்காக என் மனதில் இரக்கத்தை இறைவன் உண்டாக்கி இருக்கிறான். நீங்களும் யானடைந்தசுகத்தை அடையவேண்டும் என்றே சொன்னேன்.

20) அ) குறித்துரைக் கின்றேன் இதனைக் கேண்மின் இங்கே வம்மின்
கேணும் மனக் குரங்காலே நாணுகின்ற உலகீர்

ஆ) வெறித்த உம்மால் ஒரு பயனும் வேண்டுகிலேன் எனது
மெய்யுரையைப் பொய்யுரையாய் வேறு நினையாதீர்

இ) பொறித்த மதம் சமயம்லொம் பொய் பொய்யே அவற்றில்
புகுதாதீர் சிவம் ஒன்றே பொருள் எனக் கண்டறிமின்

ஈ) செறித்திடு சிற்சபை நடத்தைத் தெரிந்து துதித்திடுமின்
சித்தி எலாம் இத்தினமே சத்தியம் சேர்ந்திடுமே.

**கருத்து :**

இவ்வுலகில் செய்த தவற்றையே திரும்ப திரும்பச் செய்து கொண்டிருப்பவர்கள் வாழ்க்கை முன்னேற்றம் பற்றி ஏதும் அறியாதவர்கள். காலந்தோறும் இடந்தோறும் மதங்களையும் சமயங்களையும் உருவாக்கி அவ்வவ்காலத்துக்குப் பயன்பட வாழ்ந்தனர் எல்லாக் காலத்துக்கும் அவை பொருந்துவன அல்ல. எனவே இதுவரை வழங்கி வழி பட்டு வருகிற சமயங்களிலும் மதங்களிலும் புக வேண்டாம். தக்க சமயத்தில் உயர்ந்த அனுபவம் தருவதற்கு இறைவன் என் போன்றவர்களை அனுப்பி மற்றவர்களை உயரச் செய்கின்றான். வருக வருக.

1) நீங்கள் என்ன செய்யவேண்டும் என்பதை குறிப்பிட்டுசொல்கிறேன். இதனை கவனித்து வாழ்க்கையில் மேற்கொள்வதற்கு விரைந்து வாருங்கள். இவ்வாறு வராமல் உங்களை தடுப்பது, நாணம், அச்சம் முதலிய தடைசெய்யும் குணங்களே ஆகும். நேரே செல்வது முன்னேறுவதற்கு உரிய ஒரே வழியாகும்.

2) நான் சொல்லுவது உங்கள் நலம் நோக்குத அன்றி என் நலம் குறித்தது அன்று. அதனால் உங்களிடம் இருந்து வேறு எந்தப் பயனும் எதிர் பார்க்கவில்லை. ஆதலின் மனம் வேறுபட்டு விலகிவிடாமல் விரைந்து தக்க காலத்தில் வாருங்கள்.

3) இதுவரை பலரால் வழிபடப்பட்டும், எழுதப்பட்டும் வருகின்ற மதங்களும், சமயங்களும் எல்லாக்காலத்துக்கும் இடத்துக்கும் பொருத்த மானவை அல்ல எனவே அவற்றை நீங்கள் வாழ்க்கையில் மேற்கொள்ள வேண்டாம். உள்ளது விளங்கும் போது உண்டாகின்ற இன்பமே உண்மை இன்பமாகும். இதுவே சிவமும் ஆகும். எனவே வேறு நினையாமல் இதனை மேற்கொள்ள வாருங்கள்.

4) இறைவன் நம் உடம்பில் இயங்குகிறபோது (நடனம் புரிகிறபோது) தான் நாம் பரிபூரணமான இன்பம் அடைகிறோம். இந்த இயக்கம் நம்முடைய உச்சியில் திருசிற்றம்பலத்தில் நிகழ்கிறது. அப்போது உச்சி குளிர்கிறது.



புதிய அனுபவத்தையும் நாம் பெறுகிறோம். இந்த நிலை நம்மை தானே வந்து அடைகிறது.

குறிப்பு :

அவன் அருளாலே அவன் தாள் வணங்கி என்றும் அருள் அலாது அணுவும் அசைந்திடாது என்றும் அருளாளர்கள் சொல்லி உள்ளனர். சிவம் என்பதில் உள்ள 'சி' உள்ளதை குறிக்கிறது. 'வ' விளங்குவதை குறிக்கிறது. 'ம்' உள்ளது விளங்குவதால் உண்டாகிற இன்பத்தை குறிக்கிறது. சிவம் என்பது உள்ளது விளங்கும்பொழுது உண்டாகிற இன்பம்தான் நான் பெற்றது போலே நீங்களும் பெருவாழ்வு பெற வேண்டும் என்பதுதான் திருவுளசம்மதம் ஆகும்.

குறிப்பு :

திருவருள் மொழி என்பது என்ன? மனித மொழி, தேவர் மொழி, முனிவர் மொழி, இயற்கை மொழி என்ற நான்கும் படிப்படியாக உயரும் ஆங்கார மொழிகளே ஆகும். இவற்றிற்கு மேல் கற்பனை வளத்தால் புதிய உண்மைகளை காட்டவல்லது அபர ஓங்கார மொழி. அதற்குமேல் தூய உடம்பையும், பிரணவ உடம்பையும் தரவல்லதாகிய பர ஓங்கார மொழியாகிய சதாசிவ மொழி என்கின்ற அருள்மொழி. இதற்கும்மேல் ஏழாவது மொழிதான், உண்மை, முழு உண்மை. உண்மை தவிர பிறிதொன்றுமில்லை என்ற அசைவில் அறிவிக்கவல்ல பரிபூர்ணமான உண்மைமொழி என்கின்ற திருவருள் மொழியாகும்.

21) அ) சேர்ந்திடவே ஒருப்படுமின் சமரச சன் மார்க்கத்
திருநெறியே பெருநெறியாம் சித்தியெலாம் பெறலாம்

ஆ) ஓர்ந்திடுமின் உண்ணுதற்கும் உறங்குதற்கும் உணர்ந்தீர்
உலகம் எலாம் கண்டிடும் ஓர் உளவை அறிந்திலிரே

இ) வார்ந்தகடல் உலகறிய மரணம் உண்டே அந்தோ
மரணம் என்றால் சடம் எனும் ஓர் திரணமும் சம்மதியா

ஈ) சார்ந்திடும் அம்மரணமதைத் தடுத்திடலாம் கண்டீர்
தனித்திடுசிற் சபை நடத்தைத் தரிசனஞ்செய்வீரே.

கருத்து :

பெருநெறி என்பது சிறப்பு உண்மை என்கிற சுத்த சன்மார்க்கமே ஆகும். அதனை அடைந்தவர்களே மரணமிலாப் பெருவாழ்வை பெறமுடியும். மற்ற எவராலும் மரணத்தை தடுக்க இயலாது. எனவே கேவல

சன்மார்க்கத்தையும் சகல சன்மார்க்கத்தையும் கடந்து சுத்த சன்மார்க்கத்தை பெற்றிடுவீர்.

1) சமரச சன்மார்க்கம் ஒன்று தான் பெருநெறி என்கிற திருநெறி; மெய்ப்பொருள் அறிகின்ற நெறி. எனவே இதை உறுதியாக நம்பி அடைந்திடுவீர்.

2) பெருவாழ்வை பெறுவதுதான் சித்தி எலாம் பெறுவது. இதை அறியாமல் உண்ணுவதும், உறங்குவதும் நிலையற்றதை செய்வதுமாகிய உலக அனுபவத்திலே வீண் பொழுது போக்குகிறீர்.

3) மரணம் என்பது உலக அனுபவத்தை கடந்தவர்கள் மட்டுமே நீக்கத்தக்கது. எல்லோரும் பிறப்பதும் இறப்பதுமாக சுழன்று கொண்டே இருக்கின்றனர். இந்த நிலையை விட்டு மேல் நிலையை அடைவதற்கு, பெருவாழ்வை பெறுவதற்கு வழிகாட்டுவதுதான் பெருநெறி.

4) சிறப்பு உண்மைநெறி என்பது உயிர்களின் உச்சியில் இருந்து அதாவது திருச்சிற்றம்பலத்தில் இருந்து எல்லா உயிர்களையும் இயக்குகின்ற இயவுள் தான் அருட்பெரும் ஜோதி ஆண்டவர் என்பதைப் புரிந்து கொள்வது. அவர் அருளை பெறுவதற்கு உயிர்களை அவர் எப்படி திரு நடம் புரிந்து காப்பாற்றுகிறார். மேல் ஏற்றுகிறார் என்பதை உயிர்பணியில் செய்வதன் மூலம் புரிந்து கொள்ளவேண்டும். திரு நடம் கண்டவுடன் மரணம் தானே விலகிவிடும். இதைத்தான் 'கேடிலியை காணும் அவர் கேடிலாரே' என்பர் சான்றோர்.

**குறிப்பு :**

பரம் + அபரம் = பராபரம். இந்த நிலை பரநிலையையும் அபர நிலையையும் கடந்த நிலை என சொல்வது தவறு. உலகத்தை துறந்து நித்திய வாழ்வை பெறலாம் என்பதும் தவறு. உலக அனுபவத்தை தூய்மை செய்து கொண்டே தூய தேகத்தை பெற்ற பிறகே பிரணவ தேகத்தையும் ஞான தேகத்தையும் பெற முடியும். அபர காயமாகிய இந்த உடம்பை பரகாய மாகவும் பராபர காயமாகவும் மாற்ற வேண்டும். இதைத்தான் பராபரத்து உல்லையில் இட்டு' என்கிறார் திருமூலர். இதை அண்டபிண்ட பூரண பாவன அனுட்டானவிதி என்ற உபதேசப்பகுதியில் வள்ளல் பெருமான் சொல்லி யிருக்கிறார்.

அறிவு இறை அனுபவ பயன் இயல் இதில் ''மெய்தாவ நினைத்திடுக'' என வருகிறது. இதில் உள்ள மெய் என்ற சொல் உடம்பையும் குறிக்கிறது. பரிபூரணமாக நிறுவப்பட்ட உண்மையையும் குறிக்கிறது.

உலகத்திலிருந்து உடம்பை பிரிப்பது போலித் துறவே ஆகும். உடம்பையும் உலகத்தையும் ஒருங்கே வென்றேன் என்பதைத் தான் 'சிற்சபையும் பொற் சபையும் சொர்க மெனதாச்சு' என்கிறுர் பெருமான். இங்கு மெய்தாவுதல் என்பது உடம்பை இயக்குகிற மனதையும் உயிரையும் இறைவன் தான் இயக்குகிறுர் என அறிந்து கொள்வதுதான் முழு அறிவு ஆகிறது. இதைத்தான் அவனன்றி ஓர் அணுவும் அசையாது எனவும், அருளலாது அணுவும் அசைந்திடாது எனவும் கூறுவர். 28 பாடலில் நித்தியவான் பொருள் என்பது இறைவனைக் குறிக்கின்றது. வானத்தின் கீழ் உள்ள எல்லாப் பொருள்களையும் அனித்திய நிலையிலிருந்து மாற்றி நித்திய நிலைக்கு கொண்டு வருவது இறைவன் செயலே ஆகும். இதைத்தான் 'பரகாயப் பிரவேசம்' என்பார் திருமூலர் இறை என்ற சொல்லுக்கு 'அழியாமல் தங்கி இருப்பது' என்பது பொருளாகும் இறைச்சிப் பொருள் என்பது ஒருவாக்கியத்தின் பொருளுடன் மறைவாக இருக்கும் பொருளையே குறிக்கிறது. இதற்கு 'உடனுறை' என்ற பெயரும் உண்டு. உலகப் பொருள்களோடு இறைவன் உடனுறையத் தவறினல் எப்பொருளும் இயங்க இயலாது. அதனுல்தான் இறைவனுக்கு கடவுள் என்ற பெயரோடு இயவுள் என்ற பெயரும் வழங்குகிறது.

22) அ) செய்தாலும் தீமை எலாம் பொறுத்தருள்வான் பொதுவில்
திரு நடஞ்செய் பெருங்கருணைத் திறத்தான் அங்கவனை

ஆ) மெய் தாவ நினைத்திடுக சமரச சன் மார்க்கம்
மேவுக என்றுரைக்கின்றேன் மேதினியீர் எனைத்தான்

இ) வைதாலும் வைதிடுமின் வாழ்த்தெனக் கொண்டிடுவேன்
மனங்கோணேன் மானம் எலாம் போனவழி விடுத்தேன்

ஈ) பொய் தான் ஓர் சிறிதெனினும் புகலேன் சத்தியமே
புகல்கின்றேன் நீவீர் எலாம் புனித முறும் பொருட்டே.

**கருத்து :**

இப்பாடலில் பெருமான் சொல்லுகிற அனைத்துச் செய்திகளும் முழு உண்மையாகும். எல்லா உயிர்களுக்கும் நலம் பயக்கும் பெருங்கருணை உடையவன் இறைவன் இதை உணர்தவர் செய்கிற தவறுகளையும் மன்னிக்கிறான். எனவே உலகியலில் உழலும் அனைவரும் பொதுவில் சிற்றம்பலத்தில் நடம்புரியும் இறைவனை நோக்கி நினையுங்கள். 'நினைக்கத் தனக்கு' என்ற மூதுரையின் விரிந்த பொருளும் இதுவே.

1) எல்லா உயிர்களிடத்தும் பொது நடம் புரிகின்ற இறைவன் பெருங் கருணைத் திறனுடையவனாதலால் நாம் அறிந்தும் அறியாமலும் செய்கின்ற தீமைகளையெல்லாம் மன்னித்து அருள்வான்.

2) இவ்வுலகில் மேற்போக்காக வாழ்கின்ற அன்பர்களே உங்கள் உயிருக்கும் உயிராக உள்ளிருக்கும் இறைவனை உங்கள் மனத்தோடு உடம்பும் நெருங்கி பொருந்தி நிற்க நினையுங்கள்.

3) இந்த சிறந்த உண்மையை நீங்கள் புரிந்து கொள்ள முடியாமல் என்னை வைதாலும் அதனை நான் வாழ்த்து என்றே ஏற்றுக்கொள்வேன். காரணம் உயிர்கள் உயர்ந்த பயனை அடையும் பொருட்டு நான் என் போலி மானத்தை துறந்து விட்டேன்.

4) இப்படி நான் சொல்வது வெறும் கற்பனை என்று எண்ணிவிட வேண்டாம். நீங்கள் தூய்மை அடைய வேண்டும் என்பதற்காகவே நான் இதனை உங்களிடம் சொல்கின்றேன்.

**குறிப்பு :**

புனிதம் என்பது புல் நிதம் என்ற இரு சொற்களால் உருவாகிறது. தொடர்ந்து தினம் (நிதம்) இறைவனையே (அணுகி) புல்லி நிற்பது புனிதம் ஆகிறது. இதனையே மெய் தாவ நினைந்திடுமின் என்ற சொற்றொடரும் குறிக்கிறது. இதனை 'மண்ணாதி ஐம்பதம் வகை இரண்டு' என்று தொடங்கும் பாடல் விரித்து விளங்குகிறது.

23) அ) பொருட்டலதும் போகம் எலாம் பொய்யாம் இங்கீது நான்
புகலுவதென் நாடொறுநும் புந்தியிற் கண்டதுவே

ஆ) மருட்டுலகீர் இருட்டுலகில் மடிவதழகலவே
மரணமில்லாப் பெருவாழ்வில் வாழவம்மின் இங்கே

இ) பொருட்டிறஞ் சேர் சுத்த சிவ சன் மார்க்க நிலையில்
பொருந்துமின் சிற் சபை அமுதம் அருந்து மின் அன்புடனே

ஈ) அருட்டிறஞ் சேர்ந் தெண்ணிய வாறாடு மினோ நும்மை
அடுப்பவரே அன்றி நின்று தடுப்பவர் மற்றிலையே.

**கருத்து :**

உள்ளதை உள்ளபடியே அறிந்து இன்புறுவதுதான் பெருவாழ்வு. இதனையே சுத்தசிவ வாழ்வு என்பர். இந்த நிலைக்கு வந்தவர்களைச் சூழ இருப்பவர்கள் அவர்களைப் பின்பற்றுவர்களே அன்றி தடுத்து நிறுத்தக் கூடியவர்கள் அல்லர்.

1) உங்கள் அனுபவம் பொய் அனுபவமே. வாழ்வோடு பொருந்தாத அனுபவமே. அதனை நீங்கள் தொடர்வதை விட்டு நீங்கள் உங்கள்

அனுபவத்தில் கண்ட உண்மைக்கு விரோதமாகச் செல்லாதீர்கள். அது சன்மார்க்கம் அன்று.

2) நீங்கள் மருளுவதால் அறியாமை இருளில் கிடந்து துன்புறுகிறீர்கள், முடிவில் மரணமும் அடைகிறீர்கள். இது புனிதமான மனித வாழ்வுக்கு அழகல்ல. உள்ளும் புறமும் ஒத்து இறைவனோடு பொருந்தி வாழ்கின்ற வாழ்க்கைதான் மரணமில்லாப் பெருவாழ்வு இதை அடைவதற்கு உங்கள் மனநிலை பண்பட்டு உயரும் நேரமும் இடமும் இதுவேயாகும்.

3) சுத்தசிவ சன்மார்க்கநிலை என்பது சிறப்பு உண்மை நெறியாகும். இதனை பொருள் திறம் சேர் சுத்த சிவ சன்மார்க்கம் என்பர். பொருளின் தன்மையை அறிவது தனிப்பட்டவர் தன்மையை அறிவதைவிட அரிதாகும். இவ்வருஞ்செயலை நிறைவேற்றிய உடனே உடம்பில் அமுதம் ஊறத் தொடங்கி விடுகிறது. இவ்வமுதம் ஊறுகிற தருணத்தையும் சூழ்நிலையையும் இப்போது என்றும் இங்கு என்றும் குறித்திடுவர்.

4) இந்த இடத்தை நோக்கி நீங்கள் நினைவிலும் செலிலும் அருள் வன்னமாக பணிபுரிந்து ஆடுங்கள். அவ்வாறு நீங்கள் செய்கிறபோது உங்களை சூழ்ந்து இருக்கும் அனைவரும் உங்களைப் பின்பற்றுவார்களே தவிர, உங்களை எதிர்த்து உங்கள் பணியை தடைசெய்யக்கூடிய ஆற்றல் உடையவர்களாக இருக்க முடியாது. காரணம் உங்கள் எண்ணம் எல்லாவற்றையும் இயக்குகின்ற அருளின் திறமையை பெற்றது. அதற்கு எதிரான மருள் திறமை உடையவரும் உங்களை மருட்டி வென்றுவிட இயலாது.

குறிப்பு :

மூன்றாவது பகுதியின் விளக்கத்தில் பொருள் திறம் என்பதை வஸ்து தந்திரம் என்பர். தந்திரம் என்பது நூலைக் குறிக்கும். தனிப்பட்டவருடைய திறமையை அறிவதற்கு கர்த்துரு தந்திரம் என்பர். ஒரு செயலைச் செய்வரை நாம் புரிந்து கொள்வது எளிது. ஆனால் அவரால் செய்யப்பட்ட பொருளின் தன்மையையும் செய்யப்படவேண்டிய பொருளின் தன்மையையும் ஒப்பிட்டு உணர்ந்து கொள்வது மிக மிக அரிதாகும். இதைத்தான் வஸ்து தந்திரம் என்பர். இந்த அருஞ்செயலை செய்யக்கூடியவர்தான் நிலைத்து வாழக் கூடியவர். இந்த உண்மையை ''ஒத்தது அறிவான் உயிர் வாழ்வான்'' என்கிறது திருக்குறள். ஆணவம் இருக்கிற பொழுது சமரசம் உருவாகாது. சமரசம் தோன்றிய உடனே அமுதம் உடம்பில் சுரக்கத் தொடங்கிவிடும். இதனையே சத்தினிபாதம் என்பர். இது மலபரி பாகத்தை அடுத்த இருவினை ஒப்புவந்த பிறகுதான் வரும்.

24—1 அ) மற்றறிவோம் எனச்சிறிது தாழ்த்திருப்பீர் ஆனால்
மரணமெனும் பெரும்பாவி வந்திடுமே அந்தோ

ஆ) சுற்றும் அதை நும்மாலே தடுக்க முடியாதே
சமரச சன்மார்க்கத்தவர்கள் அல்லால் அதனை

இ) எற்றி நின்று தடுக்கவல்லார் எவ்வுலகில் எவரும்
இல்லை கண்டீர் சத்திய மீதென் மொதி கொண்டுலகீர்

ஈ) பற்றிய பற்றனைத் தினையும் பற்றற விட்டு அருள்
அம்பலப்பற்றே பற்றுமினோ என்றும் இறவீரே.

**கருத்து :**

பின்னால் பார்த்துக் கொள்ளலாம் என்று எண்ணிவிட்டால் மரணத்தைத் தடுத்து நிறுத்தும் வாய்ப்பை அடைந்திட முடியாது. இது சமரச சுத்த சன்மார்க்க சாத்தியர்களுக்கே முடியும். இதற்கு உலகு அம்பலவிதம் என்பதைப் புரிந்து கொள்வதே திறவு கோலாகும்.

1) பிறகு பார்த்துக் கொள்ளலாம் பிறகு பார்த்துக் கொள்ளலாம் எனக் காலத்தைக் கடத்தினால் மரணம் எனும் கொடிய நோய் வந்துவிடும்.

2) அதை தடுத்து நிறுத்த வல்லவர்கள் சமரச சுத்த சன்மார்க்கிகளே, அத்தகைய சன்மார்க்கிகள் ஆகும் வரை உங்களால் தடுத்து நிறுத்த முடியாது.

3) இந்த மரண நோயை தடுத்து விலக்கி நிறுத்தக்கூடியவர்கள் வேறு எந்த உலகத்திலும் யாரும் இல்லை. நான் சொல்வது என் அனுபவத்தில் நான் கண்ட சத்தியம்.

4) நீங்களும் அகுள் அம்பலப் பற்றை உறுதியாக பற்றிக் கொண்டால் இந்த மரண நோயை எளிதாக தடுத்து நிறுத்திவிடலாம். உங்கள் அனுபவத்தில் உள்ள போலிப்பற்றுக்களே உங்களை மரணமடையச் செய்கின்றன. எனவே அவற்றையெல்லாம் விட்டுவிட்டால் மரணநோய் உங்களை விட்டு விலகி விடும்.

25) அ) இறந்தவரை எடுத்திடும் போதரற்று கின்றீர் உலகீர்
இறவாத பெரும் பரம் நீர் ஏன் அடைய மாட்டீர்

ஆ) மறந்திருந்தீர் பினிமூப்பில் சம்மதமோ நுமக்கு
மறந்தும் இதை நினைக்கில் நல்லோர் மனம்
நடுங்கும் கண்டீர்

இ) சிறந்திடு சன் மார்க்கம் ஒன்றே பிணி மூப்பு மரணம்
சேராமல் தவிர்த்திடுங்காண் தெரிந்து வம்மின் இங்கே

ஈ) பிறந்த பிறப்பிதிற்றானே நித்திய மெய் வாழ்வு
பெற்றிடலாம் பேரின்பம் உற்றிடலாம் விரைந்தே.

**கருத்து :**

அறியாமையால் ஆசையும், ஆசையால் வறுமையும், வறுமையால் பிணியும், பிணியால் முதுமையும், முதுமையால் மரணமும் வருகிறது. இந்த மரணம் அடைந்தவரை பார்த்து அலறுகின்றவர்களாகிய உங்களுக்கு அதிலிருந்து விடுதலை அடைய வேண்டும் என்ற எண்ணம் ஏன் வரவில்லை? இரக்கம் உடைய நல்லவர்களுக்கு மட்டுமே இந்த எண்ணம் அடிக்கடி வருகிறது எனவே இரக்க மற்றவரே இறக்க நேரிடுகிறது.

1) மரணமடைந்தவர்களைப் பார்த்து அழுகின்றீர்களே? நீங்கள் ஏன் மரணத்தை தடுக்க வேண்டும் என்று எண்ணவில்லை.

2) இதற்கு காரணம் நீங்கள் பிணி மூப்பு இறப்பு என்ற தொடர்ச்சியை அறிந்திருந்தும் மறந்து விடுகிறீர்கள். பிணி மூப்பு இறப்பில் உங்களுக்கு விருப்பம் உண்டோ? இல்லையென்பதே உங்கள் அழுகையால் தெரிகிறதே. சான்றோர் உயிர்களிடத்து இரக்கம் உடையவர். ஆகையால் அவர்கள் உங்கள் மரணத்தைப் பற்றி நினைக்கும் போதே நடுங்குகிருர்கள்.

3) சிறந்த உண்மை நெறியே சுத்த சன்மார்க்கம். இதை உறுதியாக பின்பற்றி வாழ்பவர் மட்டுமே பிணி மூப்பு மரணத்தை தவிர்க்கவல்லவர்கள்.

4) என் வாழ்க்கையைக் கொண்டே இப்பிறவியிலேயே பிணி மூப்பு இறப்பு என்ற மூன்றையும் அகற்றிவிடலாம் விரைந்து பேரின்பமும் பெற்று விடலாம், என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள்.

26) அ) உற்றமொழி உரைக்கின்றேன் ஒருமையினால் உமக்கே
உறவன் அன்றிப் பகைவன் என உன்னாதீர் உலகீர்

ஆ) கற்றவரும் கல்லாரும் அழிந்திடக் காண்கின்றீர்
கரணம் எலாம் கலங்கவரும் மரணமும் சம்மதமோ

இ) சற்றும் இதைச் சம்மதியா தென் மனந்தான் உமது
தன் மனந்தான் கன் மனமோ வன் மனமோ அறியேன்

ஈ) இற்றிதனைத் தடுத்திடலாம் என்னொடும் சேர்ந்திடுமின்
என் மார்க்கம் இறப்பொழிக்கும் சன் மார்க்கந்தானே.

**கருத்து :**

அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி என்கின்ற புத்தி, சித்தம், மனம், அகங்காரம் ஆகிய 4 கரணங்களும் கலங்குவதால்தான் மரணம் வருகிறது. இந்த மரணத்தை தடுக்கவல்லது சுத்த சன்மார்க்கம் ஒன்றே. இதுவே என்னுடைய மார்க்கம். இறப்பொழிக்கும் சன் மார்க்கம்.

1) உலகத்தவர்களே நடந்ததை, பொருத்தமானதை, உங்களுக்குச் சொல்லுகிறேன். இது என் உறவினர் நீங்கள் என்கிற மன ஒருமையினாலும் உறவினாலும் சொல்வது.

2) கரணம் கலங்க வரும் மரணத்தைப்பற்றி இதுவரையிலும் கற்றவர்கள் கூட அறிந்து கொள்ளவில்லை. இதைத்தான் 'கரணம்' தப்பினால் மரணம் என்ற மூதுரையும் தெரிவிக்கிறது.

3) இளகிய என் மனம் இதை ஏற்றுக்கொள்ளாது. உங்கள் மனமோ இறுகிய கன் மன மாகவும் வன் மனமாகவும் இருக்கிறது.

4) இன்றே இப்பிறவியில் இந்த மரணத்தை தடுத்து நிறுத்தி விடலாம். இறப்பை ஒழிக்கின்ற சன்மார்க்கியாகிய என்னோடு சேர்ந்து கொள்ளுங்கள். நீங்களும் என் போல விரைந்து இறப்பை ஒழித்து நித்திய வாழ்வை அடையலாம்.

27) அ) சன்மார்க்க பெருங் குணத்தார் தம்பதியை என்னைத்
தாங்குகின்ற பெரும்பதியைத் தனித்த சபாபதியை

ஆ) நன்மார்க்கத் தெனை நடத்திச் சன்மார்க்க சங்க
நடுவிருக்க அருளமுதம் நல்கிய நாயகனைப்

இ) புன் மார்க்கர்க் கறிவரிதாம் புண்ணியனை ஞான
பூரணமெய்ப்பொருளாகிப் பொருந்திய மா மருந்தை

ஈ) அன்மார்க்கம் தவிர்த்தருளி அம்பலத்தே நடஞ்செய்
அருட் பெருஞ் சோதியை உலகீர் தெருட்கொளச் சார்வீரே

**கருத்து :**

உலக அனுபவத்திலேயே உழன்று கொண்டு இருக்கும் அன்பர்களே அருட்பெரும் ஜோதி ஆண்டவரை அணுகினால் போதும். நான் பெற்று இருக்கும் பெறுவாழ்வு முதலிய அனைத்தையும் நீங்களும் அடைந்து இன்புறலாம்.

1) சன்மார்க்க பண்புடையவர்களின் தலைவராகவும், என்னை தாங்குகின்ற பெரும் தலைவராகவும் ஞான சபை தலைவராகவும் விளங்குபவர் அருட்பெரும் ஜோதி ஆண்டவரே.

2) நான் நன்னெறியில் நடக்கும்படி செய்து சிறப்பு உண்மை நெறியில் நபி நாயகமாக விளங்கவும் செய்து அருளியவர் அவரே. எனக்கும் என்றும் அழியாத அருளமுதத்தையும் வழங்கி இருப்பவரும் இவரே.

3) சிறுநெறி செல்பவர்களால் அறிந்து கொள்வதற்கு அரியவர் அவர். அவரே எல்லாப் புண்ணியங்களுக்கும் தலைவர் ஆவர். எல்லா நோய்களையும் தீர்த்து அருளும் மாமருந்தாக விளங்குகின்றவர்.

4) உலகத்தவர்களாகிய நீங்கள் தெளிவு அடைய வேண்டுமானால் அவர் அருளும் அருளமுதத்தை அருந்த வேண்டும். அதை அருந்தினால் நெறி அல்லா நெறியில் சென்று துன்புற வேண்டாம். இன்புருவம் பெற்று என்றும் வாழலாம். வருக! வருக! வருக!

**குறிப்பு :**

ஆணவம் நீங்கியவுடன் உடம்பும் உள்ளமும் ஒருங்கே பண்படுகின்றன. சமரச சுத்த சன்மார்க்க நிலை தோன்றுகிறது. உடம்பிலும் மனதிலும் உயிரிலும் அமுதம் ஊறுகிறது. முத்திறல் வடிவம் (சுத்த, பிரவை, ஞான தேகம்) பெறுகின்ற வாய்ப்பும் கிடைக்கின்றது. அன்மார்க்கம் என்பது அன்மையைக் குறிக்கிறது. அன்மை வேறு, இன்மை வேறு. அன்று என்பது வேறு. இன்று என்பது வேறு. அன்மை நெறியே நெறியல்லார் நெறி.

28) அ) சார் உலக வாதனையைத் தவிர்த்தவர் உள்ளகத்தே
சத்தியமாய் அமர்ந்தருளும் உத்தம சற்குருவை

ஆ) நேர் உறவை எவராலும் கண்டுகொளர்க் கரிதாம்
நித்திய வான் பொருளை எலா நிலைகளுந்தான் ஆகி

இ) ஏர் உறவே விளங்குகின்ற இயற்கை உண்மை தன்னை
எல்லாம் செய்வல்லபத்தை எனக்களித்த பதியை

ஈ) ஓர் உறவென்றடைந்துலகீர் போற்றி மகிழ்ந்திடுமின்
உள்ளம் எலாம் கனிந்துருகி உள்ளபடி நினைத்தே.

**கருத்து :**

உள்ளம் முழுவதும் கனிந்து உருகும்படி அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரையே சிந்தனை செய்தால் நாம் சார்ந்திருக்கும் இந்த உலகத்து துன்பம் ஒரு சிறிதும் நம்மை தீண்டாது விலகி விடும். நாமும் அருட்பெருஞ் ஜோதியையும் பெற்று அழியாத உடம்புடன் வாழலாம். வருக!

1) உலக சாதனையை விட்டு விலகியவர் உள்ளத்தில் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் முழு உண்மையாக விளங்குகிறார்.

2) இறைவன் முழு உண்மையாகவும் பரிபூரணமான குருவாகவும் விளங்குகிறார். இறைவன் வான் முழுதும் பரவியிருக்கும் பொருள். ஆதலின் எல்லோராலும் நேருக்கு நேர் கண்டு கொள்ளக்கூடிய பொருள் அல்ல. என்றாலும் பெருநெறியில் உருகிப் பெருகவல்ல அனைவராலும் அனுபவிக்கக் கூடிய அரும் பொருளே ஆவர்.

3) இறைவனே இயற்கை உண்மையையும் இயற்கை விளக்கமும், இயற்கை இன்பமும் ஆகிறார். அதனால் எல்லாம்வல்ல சித்தியை எனக்கு வழங்கி இருக்கிறார்.

4) இறைவனை தவிர வேறு எந்த உறவினரும் நித்தியமான உறவினர் இல்லர். அதனால் நமக்கு ஒப்பற்ற ஒரே உறவினர் இறைவன்தான். இதை உணர்ந்து கனிவுடனும் அறிவுடனும் தெளிவுதரும் துணிவுடனும் தொடர்ந்து நினைந்தால் பெருவாழ்வைப் பெற்றிடலாம்.

பகுதி இரண்டில் நித்திய வான் பொருள் என்று இறைவன் குறிக்கப் பெறுகிறார். அவரை அடைவதற்கு கனிவும் துணிவும் தேவை. இதையே ''ஏற்றம் நினைவும் துணிவும் ஆகும்'' என்கிறது தொல்காப்பியம். வானொலிப் பெட்டியிலும் அலை அளைவைக் கணிப்பது துணிவைக் குறிக்கிறது. நிலையத்தோடு அதைப் பொறுத்திக் கேட்பதும் பார்ப்பதும் நினைவைக் குறிக்கிறது. இவ்வாறு அனுபவிக்க வழிகாட்டுகிற உண்மையைத்தான் நித்திய வான் பொருள் என்கிறார் வள்ளலார். இதுவே அருட்பெருஞ் ஜோதி.



## உலகின் வழிபாட்டு விளக்கம்
## (UNIVERSAL RELIGION AND PHILOSOPHY)

ஜீவ காருண்ய ஒழுக்கம் என்பது ஒரு உயிர் அடையும் இன்பத்தைக் கண்டு வழிபாடு செய்வது. அந்த இன்பத்தை அந்த உயிர் அடைவதற்கு அதனுள் இருக்கும் இறைவனே காரணமாகும். இதை வள்ளலார் ''சீவர்களுக்குச் சீவர்கள் விஷயமாக உண்டாகின்ற ஆன்ம உருக்கத்தைக் கொண்டு தெய்வவழிபாடு செய்து வாழ்தலென்று அறிய வேண்டும்.'' எனச் சொல்கிருர். எனவே ஜீவ காருண்ய ஒழுக்கம் என்பது உயிர்கள் அடையும் இன்பத்தை இம்மை இன்பம் மறுமை இன்பம் பேரின்பம் என்று பகுத்துக்கொண்டு படிப்படியாக வாழ்க்கையில் அவற்றை அனுபவிக்க முயல்வதுதான் நம்முடைய உடம்பை ஏழு அடுக்கு மாளிகையாக கண்டு உணரவேண்டும். உணவு உடம்பு, மூச்சு உடம்பு என்ற இரண்டையும் அன்மைய, பிராணமய கோசம் என்பர். இவ்விரண்டுக்கும் பொதுவான பெயர் தூய உடம்பு அடுத்த இரண்டு அடுக்குகளை உணர்வு உடம்பு, அறிவு உடம்பு என்பர். இவற்றையே மனோமய கோசம் விஞ்ஞான மய கோசம் என்பர். இதன் மூலம் ஒரு செய்தி தெளிவாக விளக்கப்படுகிறது. சூட்சும உடம்பின் இரண்டாவது மாடியில் சோதனையின் மூலம் தெரிந்ததைக் கொண்டு தெரியாததை விளக்கிக் கொள்வது தான் அறிவியல் என்று தெரிந்து கொள்ளலாம். இதனை வாழ்க்கையில் மேற்கொள்ளும் பொழுது உணவு முதலியவற்ருல் அடையும் இம்மை இன்பமும் புதிய வாழ்க்கை முறையால் அமையும் மறுமை இன்பமும் கடவுள் அனுபவத்தால் உருவாகும் பேரின்பமும் உருவாகின்றன. இவற்றை ஆனந்த மய கோசம் அல்லது இன்புருவம் என்றும் சான்ருேர் குறிப்பிடுவர். கடவுள் அனுபவம் என்ற தொடரை காரண உடம்பின் மூன்ருவது உச்சப் பகுதியாக கொள்ளவேண்டும். இதனை மூல காரண உடம்பு என்பர். அதற்கு முன் இருக்கிற மறுமை இன்ப உடம்பை மகா காரண உடம்பு என்பர். அதற்கு முன் உள்ள ஆனந்த மய கோசத்தை காரண உடம்பு என்பர். ஆக அன்னமய, பிராணமய, மனோமய விஞ்ஞானமய காரன, மகா காரண, மூலகாரண உடம்புகள் என ஏழு வகைப்படும். ஒருவர் வாழ்க்கையில் முதல் 5 படிகளை உணர்ந்து முன்னேற வேண்டும். கேவலபடி, சகலபடி, பிரளாயகலபடி, விஞ்ஞானகல படி, சுத்தப்'படி என்பன 5 படிகளாகும் இவற்றுள் கேவலப்படி என்பது தனி ஒருவர் செய்யும் வழிபாட்டையும் அதன் பயனையும் குறிப்பது. இதனை 'கேவல சன்மார்க்கம்' என்பர். இதில் ஆணவம் மேலோங்கி நிற்கும். இரண்டாவது படியை சகல சன்மார்க்கம் என்பர். இதையே வள்ளலார் பொது உண்மைநெறி என்கிருர். இதில் ஆணவம் விலக விலக அச்சம் ஓரளவு நிலைபெறும். இந்த அச்சத்தையும் கடந்து வாழ்க்கையில் புதிய மாற்றங்களை உண்டாக்கிக் கொள்வதுதான் பிரளயாகலர் என்கின்ற புரட்சி

உண்மை நெறியாகும். விஞ்ஞான கலர் என்பது அறிவின் அடிப்படையில் அச்சத்தையும் ஆணவத்தையும் ஒருங்கே ஒதுக்கிவிட்டு புதிய உண்மைகளை அதாவது அதுவரையில் அறிந்து கொள்ளாத புதிய உண்மைகளை அறிந்து கொள்வதுதான். இதன் விளைவுதான் 5 வது படியாகிய சுத்த சன்மார்க்கம். இதனை சிறப்பு உண்மைநெறி என்பார் பெருமான். இந்த நிலையில் எண்சாண் உடம்பையும் அதை இயக்குகிற அருந்திய நித்திய மூச்சுகளையும் நாம் அறிந்து கொள்ளுகிறோம். இதையே ''எட்டு இரண்டு என்பன இயலும் முன்படி என அட்ட நின்று ஓங்கிய அருட்பெருஞ்ஜோதி'' என்கிறது திரு அகவல் இப் பாடலில் இயலும் முன்படி என்ற மூன்று சொற்களும் அனித்தியமூச்சு படிப் படியாகக் குறைந்து நித்திய மூச்சு வளர்வதை அனுபவத்தில் காணலாம் என்பதைக் குறிக்கிறது எட்டு என்பது எண்சாண் உடம்பை குறிக்கிறது. இரண்டு என்பது நாசியின் வழியாக நிகழும் அனித்திய மூச்சையும் உள் நாவின் வழியாக நிகழும் வாசி என்கிற நித்திய மூச்சையும் குறிக்கும். இந்த இரு மூச்சுகளில் உடம்பு பற்றிய அனித்திய மூச்சு குறைந்து உள்ளத்தையும் உயிரையும் பற்றிய நித்திய மூச்சு வளர்வது இறை அருளால் நிகழும் இதனை ''வாசி நடத்தித் தருவாண்டி ஒருவாசியிலே இங்கே வருவாண்டி ஆசு இல் கருணை உருவாண்டி — அவன் அற்புதத் தாள் மலர் போற்றுங்கடி'' என்று பெருமான் கீர்த்தனைப் பகுதியில் சொல்கிறார். இயலும் முன்படி என்ற சொற்றொடரை தொடக்கத்தில் தானே நிகழக்கூடிய கடவுள் அனுபவமாகக் கொள்ளவேண்டும் இயலும் முன்படியும் சகசநிட்டையும் ஒரே பொருளைக் குறிப்பனவே. பெருவாழ்வுக்குரிய 43 படிகளில் மூச்சில் ஏற்படும் அனித்திய நிலையை நீக்கி அழியாத் தன்மையாகிய நித்திய நிலையை படைப்புக்கு அடிப்படையான முதல் படியாகக் கொள்கிறோம். இதனை 'மண்ணுதி ஐம்பூதம் என்ற பாடலில் காணலாம். 15 + 4 + 24 என்ற மூன்றையும் கூட்டினால் 43 படிகள் என்ற தொகை கிடைக்கும். இவற்றுள் முதல் படியாகிய மூச்சு மாற்றத்தைத் தவிர மற்ற 42 படிகளும் தானே இறையருளால் வந்து பொருந்தும் இதனையும் ''இப்படி கண்டனை — இனி உறும் படியெலாம் அப்படியே எனும் அருட் பெருஞ்ஜோதிஎன்ற திரு அகவல் பாடலால் தெரிந்து கொள்ளலாம். இந்தப் பாடலில் இனி உறும் படியெலாம் என்ற தொடர் மூச்சு மாற்றத்தால் உள்ளமும் உயிரும் ஆளாகி மற்ற படிகள் எல்லாம் தானே பொருந்தும் என்பதை ''அப்படியே'' என்ற சொற்றொடர் உறுதிப்படுத்துகிறது. அப்படியே என்ற சொற்றொடருக்கு மூச்சு மாற்றுகிற முதல்படிதான் மற்ற 42 படிகளாகவும் மாறுகின்றன என்பது ஒருபொருள். இன்னொரு பொருள் உலக அனுபவத்தில் நம் உடம்புக்கு கொடுக்கும் முக்கியத்துவம் படிப்படியாக குறைந்து உள்ளத்திற்கும் உயிருக்கும் உரிய இடத்தை தருகிறோம். நாசி மூலம் மூச்சுவிடும் பொழுது நம்முடைய உடம்பில் உள்ள உயிர் அணுக்கள் தேய்வடைகின்றன. அவற்றிற்கு ஈடு செய்வதற்குத்தான் நாம் உண்ணவும் உறங்கவும் நேருகிறது. வாசி வளர வளர நித்திய வாழ்வு உருவாகும். உணவும்

உறக்கமும் தேவையில்லை. இது ஜீவ காருண்ய ஒழுக்கத்தால் மட்டுமே சித்தியாகும். இது 'ஆசு இல் கருணை உருவாண்டி' என்ற தொடரால் உறுதிப் படுகிறது. இப்பொழுது மற்ற 42 படிகளும் அனித்திய உலக அனுபவத்தைக் கடந்து — நித்திய உயிர் அனுபவம் — அருள் அனுபவம் — இறை அனுபவம்— என்ற மூன்றையும் அடைந்திடச் செய்கின்றன. இந்த உண்மையை அருள் விளக்க மாலை ஒரு மடந்தை என்று தொடங்கும் 47 வது பாடலிலும் அனுபவ மாலையில் பல பாடல்களிலும் காணலாம். ஞான சரியை பாடல்களிலும் இது பற்றிய குறிப்பு வருகிறது. எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்க என்ற எண்ணத்தில் ஜீவ காருண்யத்துடன் வாழ்ந்து முதல் படியாகிய வாசியின் மூலம் நித்திய மூச்சைப்பெற்று மற்ற 42 படிகளையும் கடந்து மரணமில்லாப் பெருவாழ்வு பெறுவது தான் ஜீவ காருண்ய ஒழுக்கத்தின் விளக்கமாகும். இது உலக முழுவதற்கும் உரிய வழி பாட்டு விளக்கமாகும்.

அருட் பெருஞ்ஜோதி அருட் பெருஞ் ஜோதி
தனிப் பெருங்கருணை அருட் பெருஞ்ஜோதி.

''வமுரா''

# ஜோதிப்பாடல்

ஜோதி ஜோதி ஜோதி சுயம்
வாம ஜோதி சோம ஜோதி
வான ஜோதி ஞான ஜோதி
ஆதி நீதி வேதனே

ஜோதி ஜோதி ஜோதி பரம்
மாக ஜோதி யோக ஜோதி
வாத ஜோதி நாத ஜோதி
ஆடல் நீடு பாதனே

ஜோதி ஜோதி ஜோதி அருள்
ஏம ஜோதி வியோம ஜோதி
யேறு ஜோதி வீறு ஜோதி
வாதி ஞான போதனே

ஜோதி ஜோதி ஜோதி சிவம்
ஏக ஜோதி யேக ஜோதி
யேக ஜோதி யேக ஜோதி
வாழ்க வாழ்க நாதனே

## வள்ளலார் வரலாற்று குறிப்புகள்

| | | |
|---|---|---|
| இயற்பெயர் | : | இராமலிங்கம் |
| சிறப்புப் பெயர் | : | திருவருட் பிரகாச வள்ளலார் |
| சிறப்பு | : | 5 — 10 — 1823 சுபானு புரட்டாசி |
| சிறந்த ஊர் | : | மருதூர் |
| பெற்றோர் | : | இராமையா சின்னம்மையார் |
| உடன் பிறந்தோர் | : | சபாபதி, பரசுராமர், சுந்தரம்மாள் உண்ணுமலேயம்மாள், இராமலிங்கர் 5-வது அருட் புதல்வர் |
| உரைவிடங்கள் | : | சென்னே, கருங்குழி, வடலூர், மேட்டுக்குப்பம். |
| இயற்றிய நூல்கள் | : | ஜீவகாருண்ய ஒழுக்கம், மனுமுறை கண்ட வாசகம் |
| அருளிய பாடல்கள் | : | ''திருவருட்பா'' |
| நிறுவிய நிலேயங்கள் | : | சன்மார்க்க சங்கம் 1865<br>தருமச் சாலே 23 — 5 — 1867<br>சித்திவளாகம் 1870<br>ஞான சபை 25 — 1 — 1872 |
| சித்தி | : | 30 — 1 — 1874 ஸ்ரீமுக தை 18 |

### திரைக்குரிய தத்துவ விளக்கம்

ஆன்மப் பிரகாசத்திற்குள்ளிருக்கும் ஜோதியை மறைக்க மாயா சத்திகளாகிய 7 திரைகள் உண்டு. அவை யாவன.

1. கருப்புத்திரை — மாயா சத்தி
2. நீலத்திரை — கிரியா சத்தி
3. பச்சைத்திரை — பராசத்தி
4. சிவப்புத்திரை — இச்சா சத்தி
5. பொன்மைத்திரை — ஞானசத்தி
6. வெண்மைத்திரை — ஆதிசத்தி
7. கலப்புத்திரை — சிற்சத்தி

ஜோதி சொரூபமான ஆண்டவனே நீங்கள் தரிசிக்க வேண்டுமாயின், உங்களே இயக்கும் இந்த ஏழு சத்திகளேயும் ஒவ்வொன்ருக நீங்கள் அகற்ற வேண்டும். அப்போதுதான் அகத்திலே ஜோதியைக் கண்டு தரிசிக்கலாம்.

ஆயுள் நஷ்டஞ் செய்வன நான்கு, அவையாவன ஆகாரம், மைதுனம், நித்திரை பயம்.

சுவர்க நரகம் இருக்கிற இடம் மனித தேகம்.

